# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம் நெல்வளமே நாட்டின்வளம்

" சொற்குவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 4 விளைச்சல் : 43 திருவள்ளுவர் ஆண்டு 2054 திசம்பர் – 2023


## உள்ளே...










# தீயணைப்பு மற்றும் மீட்புப் பணித்துறைக் கலைச்சொற்கள்

| | | |
|---|---|---|
| Bobbin line | – | நூற்கயிற்றுச் சுருள் |
| Fire main | – | தீயணைப்பு நீர் செல்லும் குழாய் |
| Chemical fire | – | வேதியத் தீ நேர்ச்சி |
| Combustible | – | தீப்பற்றும் பொருள் |
| Combustible dust | – | தீப்பற்றும் தூள் |
| Drag rope | – | இழு கயிறு |
| Draw bar | – | இழு கம்பி |
| Extinguisher | – | தீயணைப்பி |
| Fire boat drill | – | தீப் படகுப் பயிற்சி |
| Fire brigade | – | தீப் படை |
| Fire helmet | – | தீத்தடை தலைக் கவிப்பு |
| Foam extinguisher | – | நுரைத் தீயணைப்பி |
| Foam generator | – | நுரையாக்கப் பொறி |
| Guy line | – | உதவிக் கயிறு |
| Guy wire | – | உதவிக் கம்பி |
| Ignition | – | தீப்பற்றுதல் |
| Life line | – | உயிர்காப்புக் கயிறு |
| Overalls | – | தீத்தடைக் காப்பு |
| Rescue drill | – | உயிர்காப்புப் பயிற்சி |
| Rescue gear | – | உயிர்காப்புக் கருவிகள் |
| Siphon | – | வடிகுழாய் |
| Snorkel | – | காப்புச் சுழல் ஏணி |
| Spark | – | தீப்பொறி |
| Spindle cap | – | தீயணைப்பு நீர்த்துளைக் கவிப்பு |
| Tunic fire | – | தீயணைச் சட்டை |

**சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.**

# சொல்வயல்


செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2054, நளி (கார்த்திகை)
திசம்பர் – 2023

ஆசிரியர் : முனைவர் கோ.விசயராகவன்
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் வே. கார்த்திக்

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திருமதி. க. கத்தூரி



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai-28
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com



ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0





செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

# மொழி – மாந்த இனத்தின் அடையாளம்

மாந்தனுடன் பிறப்பாலும் மரபாலும் பின்னிப் பிணைந்தது; பிரிக்க முடியாதது அவனது தாய்மொழியாகும்.

"பெற்ற தாயும் பிறந்த பொன்னாடும்
நற்றவ வானினும் நனி சிறந்தனவே"

என்றார் உலக மகாகவி பாரதியார். உலகில் எண்ணற்ற மொழிகள் தோன்றியிருந்தாலும் ஒருவருக்கு அவரின் அடையாளம் தாய்மொழியாகும். அதனால்தான், தாயைவிட சிறந்தது தாய்மொழி என்றார் மகாகவி. மொழி வெறும் சொல்லல்ல; இனத்தின் அடையாளம்; பாண்பாட்டின் அடையாளம். ஒரு மாந்தனின் அடையாளம் சாதியோ, மதமோ, நாடோ அல்ல; மொழிதான். தாய்மொழி அழிந்துபட்டால் அவ்வினம் அழிந்துபடும் என்பர். தொன்மை, இனிமை, இளமை, எளிமை எனப் பல்வேறு சிறப்புகளைப் பெற்றுச் செம்மொழியாக உலகப் பெருமை அடைந்து நம் தாய்மொழியாம் தமிழ்மொழி தலைநிமிர்ந்து நிற்கிறது.

நமது எண்ணங்களைப் பிறருக்கு வெளிப்படுத்த மொழி கருவியாக அமைகிறது. சிந்தனை பெருக, எண்ணத்தை வெளியிடத் துணையாக நம்முடன் வலம் வருவது நம் தாய்மொழியாகும். எத்தனை மொழிகள் கற்றாலும் ஒருவரின் சிந்தனை உருவெடுப்பது அவர் தாய்மொழியில்தான். நம் தாய்மொழியாம் தமிழ்மொழியில் சிந்திக்கும்போது உயர்ந்த கருத்துகளை, சிறந்த சொற்களை நாம் உருவாக்க முடியும்.

மொழி ஓர் இனத்தின் அடையாளம். மாந்தரது படிநிலைவளர்ச்சியின் மூலப்புள்ளியாக மொழி அமைகிறது. 6000 முதல் 7000 மொழிகள் உள்ள இந்நாட்டில் 50 ஆண்டுகளுக்குப் பிறகு 600 மொழிகள்தான் மிஞ்சும் என்கின்றனர் மொழியியல் அறிஞர்கள். இதற்குக் காரணம் என்ன என ஆய்ந்து நோக்கின் ஏராளமான மொழிகள் பேச்சுவழக்கில் மட்டுமே உள்ளன. அவற்றுக்கு எழுத்து வழக்கில் இலக்கண இலக்கியங்கள் இல்லை. பேச்சு வழக்கில் மட்டுமே உள்ள மொழிகள் மாறி வரும் சூழ்நிலை, பணிச்சூழல், வளர்ந்து வரும் அறிவியல் என இன்ன காரணம் என்று அறுதியிட்டுக் கூற முடியாத நிலையில் அழிந்துவிடுகின்றன.

ஆனால், தமிழ்மொழி ஞால முதன்மொழி; அனைத்து மொழிகளுக்கும் மூலமான மொழி; பண்பட்ட மொழி; பத்தி மொழி; செம்மாந்த இலக்கண இலக்கியங்களைக் கொண்ட மொழி. இலெமூரியா எனும் குமரிக்கண்டம்தான் அமுதமொழியாம் தமிழ்மொழியின் தோற்றுவாய் என்கின்றனர் வரலாற்று ஆய்வாளர்கள். மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் அவர்களும் குமரிக்கண்டத்தில்தான் மாந்தர்களும், தமிழர்களும் தோன்றினர் என்கிறார்.

"பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள"

(சிலப்பதிகாரம். 11. 17–22)

"நம்மை மாந்தர்களாக ஆக்கும் சற்றுச் சிக்கலான செய்தியாக மொழி இருக்கிறது" என்கிறார் கேம்பிரிட்சு பல்கலைக்கழக மானுடப் பரிணாம வளர்ச்சித்துறைப் பேராசிரியர் இராபர்ட் போலே. பேச்சு என்பது ஒரு வகையில் அழகான உயிர்த்தல் போன்றதாகும்.

மொழித்தோற்றம் குறித்து ஆதனியல் அடிப்படையிலும், அறிவியல் அடிப்படையிலும் பல்வேறு கருத்தாக்கங்கள் நிலவுகின்றன. சிவச்சமயத்தார் மொழித்தோற்றம் என்பது சிவபெருமானின் உடுக்கை ஒலியில் இருந்து தோன்றியது என்றும், கிறித்தவர்கள் மாந்தர்களைப் படைத்தவுடனே கடவுள் மொழியையும் படைத்தார் என்றும், எகிப்தியர்கள் "தோத்" என்னும் தாங்கள் வணங்கும் தெய்வம் மொழியைப் படைத்தது என்றும், இதே போல் சீன, கிரேக்க மக்களும் "எழுத்து" கடவுளின் தோற்றம் என்றும் கூறினர். இவற்றைத் தொன்மப் புனைவுக் கதைகளாகக் கொண்டாலும் கூட எந்த ஒரு மாந்த குமுகமும் மொழியைத் தாம் வணங்கும் அனைத்துக்கும் அப்பாற்பட்ட இறை நிலையுடன் வைத்தே போற்றியது புலனாகும்.

அறிவியல் முறைப்படி மொழியை ஆராய்பவர்கள் மாந்தனிடம் அமைந்த தூண்டுதலே மொழித் தோற்றத்துக்குக் காரணம் என்றனர். மொழிக்கு உயிர் ஒலி வடிவமாகும். ஒருவர் எத்தனை மொழிகளைக் கற்பினும் தாய்மொழி மீதே தனிப்பற்று ஏற்படும். ஆங்கிலத்தில் வல்லவரான காந்தியடிகள் தம் வாழ்வு நூலை (சுயசரிதம்) தம் தாய்மொழியாகிய குசராத்தி மொழியிலேயே எழுதினார். உலகப் புகழ் பெற்ற கவிதையான கீதாஞ்சலியைத் தாகூர் தம் தாய்மொழியாகிய வங்கமொழியிலேயே எழுதினார். ஒரு மொழி பக்குவமடைய முதிர்ச்சி தேவை. அந்தத் தகுதி தமிழுக்கு உண்டு. சில மொழிகள் மரபும் தொடர்ச்சியுமின்றி வழக்கொழிந்தன. ஆனால், தமிழ்மொழி அப்படியில்லை. 2000 ஆண்டுகளுக்கு முன் எழுதிய சங்கப் பாடல்களை நாம் இப்பொழுது படித்தாலும் பெரும்பான்மை புரிகிறது; அப்பாடல்கள்

வாழ்வுக்கு வளம் சேர்க்கின்றன.

"நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆரள வின்றே சாரல்
கருங்கோல் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே"

இக்குறுந்தொகைப் பாடல் 2000 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த தமிழனும் இன்றைய தமிழனும் சந்தித்துக் கொண்டால்கூட ஒருவருக்கொருவர் பேசுவது புரியும். இச்சிறப்பு வேறெந்த மொழிக்கும் இல்லை என்கிறார் எழுத்தாளர் சுஜாதா.

செம்மொழித் தன்மையை இயற்கையாகவே தமிழ்மொழி தன்னுள் கொண்டுள்ளது. எனவே, தமிழ் அழிந்துவிடாது. ஆனால், இன்றைய நிலையில் நம் தாய்மொழியாம் தமிழ்மொழி சந்தித்துக் கொண்டிருக்கும் இன்னல்கள் ஏராளம். பேச்சுவழக்கில் புகும் பிறமொழிச் சொற்கள் தமிழ்மொழியை அழித்துக் கொண்டிருப்பது நமக்கே தெரியாமல் நம் உடலில் பரவி நம் உயிரைப் பறிக்கும் புற்றுநோய் போன்றதன்றோ! பரவ முற்படும்போது கண்டறிந்து முற்றிலும் அழிக்கப்பட வேண்டும் அல்லவா?

தமிழ்மொழி சொல்வளம் மிக்கது. ஒரு பெண்ணின் படிநிலை வளர்ச்சியைப் "பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண்" எனவும், ஆணின் படிநிலை வளர்ச்சியைப் "பாலன், மீளி, மறவோன், திறவோன், விடலை, காளை, முதுமகன்" எனவும் வகைப்படுத்துகின்ற நம் இலக்கியங்கள். இதுவன்றோ மொழிவளம். தன்னிடம் இல்லாத சொற்களைப் பிறமொழிகளிலிருந்து ஏற்றுக் கொள்ளும் மொழி அழிவதில்லை. ஆனால், தன்னிடம் இருக்கும் சொற்களைத் துறந்து பிறமொழிச் சொற்களை ஏற்றுக்கொள்ளும் மொழி விரைவில் அழிந்துவிடும். அதை நாம் நம் தாய்மொழியாம் தமிழுக்கு நடக்கவிடக்கூடாது. உலக மொழியாக, உணர்வு மொழியாக, அமுத மொழியாக விளங்கும் தமிழ்மொழி மகிழ்வுக்கு மட்டுமின்றி, துன்பம் நேருங்கால் வலியையும் துயரையும் தீர்க்கும் மொழியாகவும் விளங்குகிறது. அதனால்தான்,

"சாகும் போதும் தமிழ் படித்துச் சாகவேண்டும் – என்றன்
சாம்பலும் தமிழ் மணந்து வேக வேண்டும்"

என்றார் மொழியை உயிராய் நேசித்த ஈழத்துக் கவிஞர் க. சச்சிதானந்தன்.

மொழி காக்க உயிர் நீத்த ஈகியர் நிறைந்த இனம் என்ற பெருமையோடு தாய்த்தமிழைப் போற்றுவோம். நிற்க.,

இவ்வியக்ககம் செயற்படுத்திவருகிற கலைச்சொல்லாக்கம் உள்ளிட்ட மொழிக்காப்புப் பணிகளுக்குத் துணைநிற்கும் அகராதியியல் வல்லுநர்கள், சொல்லாக்க அறிஞர்கள், மொழியியலாளர்கள், தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், மாணவர்கள் உள்ளிட்ட அனைவருக்கும் இவ்வியக்ககத்தின் சார்பில் நன்றி நவில்கிறேன்.

அகராதியியல் அறிஞர் முனைவர் ச.சச்சிதானந்தம் அவர்களின், "மனிதர்களின் சொற்களைப் புரிந்துகொள்வதில் முன்னிற்பது குரங்கா? நாயா? எலியா?" என்னும் பொருண்மையிலான கட்டுரையும், தொல்காப்பியர் தமிழ்ச்சங்கத் தலைவர் புலவர் வெற்றியழகன் அவர்களின் " மா– ஓரெழுத்தொரு மொழி " என்னும் கட்டுரையும், மேனாள் ஆங்கில விரிவுரையாளர் முனைவர் ஆ. அரிமாப் பாமகன் அவர்களின், "கள்–கள்" என்னும் கட்டுரையும், புதுச்சேரி அரசினர் ஆய்வு நிறுவனத்தைச் சேர்ந்த முனைவர் ப. கொழுந்தசாமி அவர்களின், " வள்ளுவம் – உறழ்பொருள்: இல்லை × உண்டு" என்னும் கட்டுரையும், செய்யார், இந்தோ – அமெரிக்கன் கல்லூரித் தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர் முனைவர் வே. அருட்பாமணி அவர்களின், "நமது சூழலும் தமிழாகட்டும்" என்ற கட்டுரையும், வாணியம்பாடி, மருதர் கேசரி ஜெயின் மகளிர் கல்லூரித் தமிழ் முதுகலை (ம) ஆய்வுத்துறை உதவிப் பேராசிரியர் முனைவர் பி.பாலசுப்பிரமணியன் அவர்களின், "சங்க இலக்கியத்தில் கங்கை" என்ற கட்டுரையும் இம்மாதச் "சொல்வயல்" மின்னிதழுக்கு அணிசேர்க்கின்றன. அப்பெருந்தகைகளுக்கு மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இவ்வியக்ககம் நெறிப்படுத்தும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்குகளில் பங்கேற்றுத் தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றிய பலதுறை சார்ந்த அனைத்துத் தமிழுள்ளங்களுக்கும், என் உள்ளார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

பயிலரங்கங்களுக்கான தொழில்நுட்ப ஒருங்கிணைப்பைச் செய்துவரும் சென்னை வேல்சு அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் இரா.பன்னிருகைவடிவேலன் அவர்களுக்கும் அகம்நிறை அன்பு நன்றியை உரித்தாக்குகிறேன்.

தமிழ் என்னும் ஒற்றைப்புள்ளியில் ஒருங்கிணைந்த உள்ளத்தினராய் என்றென்றும் ஒருங்கிணைந்து செயலாற்றுவோம்...

செயலால் பேசுவோம்...

# மனிதரின் சொற்களைப் புரிந்துகொள்வதில் முன்னிற்பது குரங்கா? நாயா? எலியா?



முனைவர் பேரா. ச. சச்சிதானந்தம்
இயக்குநர்
பன்னாட்டு உயர்(கல்வி) தமிழாய்வு நிறுவனம்
பாரிசு

நாயும் எலியும் மனிதனுடன் தொடர்புடைய விலங்குகள். மனிதன் நாயைத் தன்னுடன் வீட்டில் சேர்த்துக் கொண்டான், எலி தானாகச் சேர்ந்து கொண்டது. மனிதனுடன் நாய் நெருக்கமாகவும், எலி மறைவாகவும் மனிதன் வீட்டில் பரிமாற்றம் செய்கின்றன. எனவே இரண்டு விலங்குகளும் மனிதனின் சொற்களைப் புரிந்து கொள்பவையாக இருக்க வேண்டும். சொற்களும் விலங்குகளும் எனும்போது, விஞ்ஞானிகள் மனிதனுடன் நெருங்கிய உடலமைப்புடைய குரங்குகளை ஆராய்ச்சிக்கு உட்படுத்தினார்கள். குரங்குகளில் கொரில்லா, சிம்பன்சி, பொன்ம்பா, உறாங் – ஊதான், ஜிப்பொன் எனப் பலவகை இருந்தாலும், சிம்பன்சி வகைக் குரங்குகளையே விஞ்ஞானிகள் ஆராய்ச்சி செய்தார்கள். ஏனெனில் மனிதனுக்கும் இவ்வகை குரங்குக்கும் இடையில் உடலமைப்பியல், உயிர் – இரசாயனவியல், குழியவுருவியல் முதலான ஒப்புகையில் ஒற்றுமைகள் காணப்படுகின்றன. விஞ்ஞானிகள், மனிதனின் ஒன்றுவிட்ட சகோதரன் குரங்கு என்ற சொல்லாடலைப் பயன்படுத்துகின்றனர். பிறப்புரிமையியல் அடிப்படையில் மனிதனுக்கு 46 நிறமூர்த்தங்களும், சிம்பன்சிக்கு 48 நிறமூர்த்தங்களும் கருவில் உள்ளன.

மிருகங்களில் சிம்பன்சி மிக அறிவாற்றலும் விவேகமும் உடையதாகக் கருதப்பட்டு வந்தது. ஏனெனில் உடலமைப்பு அடிப்படையிலும், பரிணாம வளர்ச்சி



அடிப்படையிலும் குரங்கே மனிதனுக்கு மிக நெருக்கமானதாக இடம்பிடிக்கிறது. குரங்கிலிருந்து வந்தவன் மனிதன் என உயிரியல் அடிப்படையில் நிறுவப்பட்டுள்ளது. அந்த அடிப்படையில் மனிதனின் அறிவும் சிம்பன்சியின் அறிவும் நெருங்கி ஒத்துள்ளவையாக இருக்கின்றன.

விலங்குகள் வீட்டு விலங்குகள் காட்டுவிலங்குகள் எனச் சுட்டப்படுகின்றன. மனிதனுக்கும் விலங்குகளுக்கும் இடையே உள்ள தொடர்பு அடிப்படையில் ஆராய்ந்தால் மனிதனுடன் தொடர்பு நெருக்கமுடையது நாய். எலி வீட்டு விலங்காகவும் தொடர்பு குறைந்த அல்லது தொடர்பு இல்லாத குரங்கு காட்டு விலங்காகவும் பாகுபடுத்தப்பட்டுள்ளன. (காட்டுவிலங்கு : மனிதனோடு தொடர்பு இல்லாதனவும், மனிதன் கண்டு அஞ்சத்தக்கனவாகவும் உள்ளவை. காட்டு விலங்குகள்: சிங்கம், யானை, குரங்குகள் – "தமிழ் இலக்கிய விலங்கினங்களும் விலங்கினச் சொற்களும்")



காட்டில் வாழ்ந்த பழங்கால மனிதன் வேட்டையாடும் மனிதனாக இருந்தான். அதற்கு உதவியாக மிருகங்களில் ஓநாய்களையும், நாய்களையும் பழக்கப்படுத்தினான். இவற்றில் மனிதனுக்கு மிகப் பயன்பாடுடையதாக நாயே முன்னின்றது. ஏனெனில் வேட்டைக்கு உதவியாளனாகவும் பாதுகாவலனாகவும் போர் ஏற்படும் இடத்து வீரனாகவும், மனிதனை விட்டுவிலகாமல் நாய் இருந்தது. காலப்போக்கில் நெருக்கம் நிமித்தம் மனிதனின் முதல் செல்லப் பிராணியாகவும் அது மாறியது. நாவை உடைய நாய், நன்றி உடைய நாய், பாதுகாவலாளியாகவும் உற்ற தோழனாகவும் வீட்டுக்காவலாளியாகவும், குழந்தைகளின் நண்பனாகவும், குடும்பத்தவர்களின் பிள்ளை போலவும் வேட்டையாடுபவர்களுக்கும் பாதுகாப்பு ஊழியர்களுக்கும் கூட்டாளியாகவும் மனிதனுக்கு மிக விசவாசுமுள்ளதாகவும் இருக்கிறது.

மொழிகளைப் புரிந்து கொள்வதில் முன்னிற்பது நாய்களா? சுண்டெலிகளா? மனித குலத்துடன் மிக நெருக்கமானதாக உள்ள விலங்கு, மனித மொழிகளுடன் மிக நெருங்கிய தாக உள்ள மிருகம் சிம்பன்சி குரங்கு என நீண்டகாலமாக நம்பப்பட்டு வந்தது. ஆனால் அண்மைக்கால ஆராய்ச்சிகள், மனிதனின் சொற்களை அதிகளவில் புரிந்து கொள்ளும் மிருகம், மனிதனின் சிறந்த நண்பனான நாயே எனப் புதுத் தகவல்களை விளம்புகின்றன.

மனிதனுக்கும் நாய்களுக்கும் இடையிலான புரிந்துணர்வை அறிந்து கொள்வதற்காக, Leipzig மானிடவியல் ஆராய்ச்சி நிறுவனம் Max Planck Institute Brian Hareஉம் அவர் குழுவினரும், Eotvos Lorand University இல் Victoria Szeteiஉம் அவர் குழுவினரும் மேற்கொண்ட வெவ்வேறு அறிவியல் ஆய்வுகளின் முடிவில் இது தெரிய வந்துள்ளது.



ஆயினும் நாய்களே மனிதனின் சொற்களை மிக அதிகமாகப் புரிந்து அதன்படி நடக்கின்றன என அறிவியல் ஆராய்ச்சிகள் மெய்ப்பிப்பதாக Men's Wealth எனும் இதழ் கூறுகிறது.

எசமான் பேசும் மொழியினைப் புரிந்துகொள்ளும் தன்மை சுமலிகளுக்கு இயற்கையாகவே உண்டு. நாய்களால் சொற்களை ஒலிக்கத்தான் தெரியாது. ஆனால் சொற்களுக்கு ஏற்ப எதிர்வினைகள் காட்டும் திறமை உடையனவாக வாழ்கின்றன நன்றியறிதலுக்கு எடுத்துக்காட்டான நாய்கள்.

நன்றி : தெரியத் தெரியத் தெரியாமை தெரியும்

"நாயே பன்றி புலி முயல் நான்கும்
ஆயுங் காலை குருளை என்ப" (தொல். பொரு. மரபியல் 8)

பொருள் : நாய், பன்றி, புலி, முயல் இவற்றின் குட்டிகளைக் குருளை என்று கூறுவர்.

# மா – என்னும் ஓரெழுத்தொரு மொழி!

புலவர் வெற்றியழகன்
தலைவர்,
தொல்காப்பியர் தமிழ்ச்சங்கம், சென்னை



செவ்வியல் மொழியாகிய நம் செந்தமிழ் மொழியில் ஓரெழுத்தொரு மொழி அறுபத்தெட்டு இருக்கின்றன. ஆனால், நன்னூல் எழுத்ததிகாரத்தில் 129ஆவது நூற்பாவில் நாற்பத்திரண்டு என்று கூறப்பெற்றுள்ளது.

ஓரெழுத்தொரு மொழியுள் மா – என்னும் ஓரெழுத்தொரு மொழியின் சிறப்பினையும், மா – என்னும் ஓரெழுத்தொரு மொழியுடன் வல்லினம் வந்து புணரும்பொழுது – வந்த வல்லினம் எங்கு மிகும்? எங்கு மிகாது – என்பதனையும் விளக்கிக் கூறுவதே இந்தக் கட்டுரையினது நோக்கமாகும்.

**மா –என்னும் ஓரெழுத்தொரு மொழியினுக்கு அகராதி தரும் பொருள்களாவன:**
1. அசைச்சொல் ; 2. அழகு ; 3. விளித்தல் (அழைத்தல்) ; 4. நில அளவு ( ஏறக்குறைய 1350 சதுரக் கிலோ மீட்டர் பரப்பளவு) ; 5. அறிவு; 6. இடை; 7. ஓரெண் – இருபதில் ஒரு பங்கு; 8. மாமரம்; 9. மாம்பழம்; 10. மாங்காய்; 11. மாவிலை; 12. கட்டு; 13. கருமைநிறம்;14. குதிரைப்பொது; 15. சீலை; 16. செல்வம்; 17. தாய்; 18. நஞ்சுக்கொடி; 19. பரி (மிகுதி, பெருமை, விரிவு) ; 20. பெரிய; 21. பெருமை; 22. சாவு (இறப்பு) ; 23. மிகுதி; 24. மேன்மை; 25. வண்டு; 26. வயல்; 27. வலி; 28. பொறுப்பு; 29. விலங்கு (விலங்குப் பொது); 30. அன்னம்; 31. ஆணி; 32. துன்பம்; 33. பொறுமை; 34. செல்வம்; 35. மாற்று; 36. மாவு (அரிசி, கோதுமை இவற்றின் அரைத்த தூள்; வரகு உள்ளிட்ட கூலத்தின் தூள்); 37. ஒருவரின் அல்லது ஒன்றன் சிறந்த அல்லது மோசமான இயல்பைக் குறிப்பிட்டு அதன் மிகுதியை உணர்த்துகின்ற பெயரடை; மேலும் சில உள.

ஓரெழுத்தொரு மொழியை அடுத்து வருகின்ற வல்லினம் மிகும் என்பது பொதுவான விதியாகும்.

எ.டு: ஆக் கன்று; ஈத் தொல்லை; காக் குயில் (சோலைக்குயில்) ; சேக் கொம்பு (எருதுக் கொம்பு); சோப் பெருமை (மதிலின் பெருமை) ; நாக் குழறியது; பாப் போட்டி.

நிலைத்திணைகளைக் (தாவரங்களைக்) குறிப்பிட்டு நிற்கின்ற சொல்லுடன் புணர்வதற்கு வல்லினம் வரும்போது தனக்கேற்ற மெல்லினம் மிகும் .

எ.டு: தேங்காய்; பூங்கொடி; பூஞ்செடி; பூந்தோட்டம்; பூம்பந்தல்

பூவினது இதழ் என்னும் பொருளுக்குப் பூ+இதழ்=பூவிதழ் என்று வகர உடம்படு மெய்யாக்கி எழுதுதல் வேண்டும். பூவும் இதழும் என்னும் உம்மைத் தொகைச் சொல்லுக்குப் பூ+இதழ் = பூ இதழ் என்று இயல்பாக எழுதுதல் வேண்டும்.

இவற்றைப் போன்று மா – என்னும் ஓரெழுத்தொரு மொழியினையும் கருதிக் கொண்டு, பலர் – மாக் கடல்; மாச் செல்வம்; மாத் தமிழ்; மாப் பதி; மாக் கவி என்று வல்லினத்தை மிகுத்து எழுதிவிடுகின்றனர்.

மா – என்பதனை நிலைத்திணைப் (தாவரப்) பொருளில் எழுதினால் வருகின்ற வல்லினத்துக்கு ஏற்ற மெல்லினத்தை இட்டு எழுதலாம்; விலங்கு, குதிரை, மாடு, யானை, புலி, அரிமா (சிங்கம்) இவற்றைக் குறிக்கும் பெயர்ச் சொல்லாக இருக்குமானால் வருகின்ற வல்லினத்தை மிகுத்து எழுதலாம்.

கூலங்களில் அரைத்து எடுக்கின்ற உலர் மாவு, ஈர மாவு என்னும் பொருளில் எழுதினால் மிகுத்து எழுதலாம்.

மா – என்னும் ஓரெழுத்தொரு மொழி – பெரிய, பெருமை, மிகுதி என்னும் பண்புப் பொருளில் எழுதினால் மிகுத்து எழுதுதல் கூடாது. பண்புப் பொருளில் மிகுத்துவிட்டால் பெயர்ச்சொற் பொருளில் அமைந்து, மாறான – தவறான பொருளைத் தந்துவிடும்.

பண்புச் சொல்லில் மிகாது என்பது பொதுவான விதியாகும். பண்புப் பொருள் உருவமற்ற அருவப் பொருளாகும்.

தண்ணீர் உருவமுடைய பொருள்; தண்மை அஃதாவது குளிர்மை (குளிர்ச்சி) உருவமற்ற அருவப்பொருள். நெருப்பு உருவமுடைய பொருள்; வெம்மை உருவமற்ற அருவப் பொருள். அதனால், பண்புச்சொல் பெரும்பான்மைக்கு மிகுதலோ, திரிதலோ நிகழா.

மா – ஓரெழுத்தொரு மொழி – நிலைத்திணையைக் (தாவரத்தைக்) குறிக்குமானால், மா – வுடன் வந்து இணைகின்ற வல்லினத்துக்கு ஏற்ற இனமான மெல்லினம் மிகும்.

எ.டு: மா+காய்=மாங்காய்
மா+கொல்லை=மாங்கொல்லை
மா+கொத்து=மாங்கொத்து
மா+கிளை=மாங்கிளை
மா+கனி=மாங்கனி
மா+சோலை=மாஞ்சோலை
மா+தோப்பு=மாந்தோப்பு
மா+பழம்=மாம்பழம்

மா – என்னும் ஓரெழுத்தொரு மொழிக்கு மிகுதல் என்பது இவ்வாறுதாம் நிகழும். மா – என்பது நிலைத்திணையை உணர்த்துகின்ற பெயர்ச் சொற் பொருளில் அமைத்து எழுதினால், வருகின்ற வல்லினத்துக்கு ஏற்ற மெல்லினத்தை மிகுத்து எழுதுதல் வேண்டும்.

விலங்கு குறித்தும் – மாவு குறித்தும் மா – என்னும் ஓரெழுத்தொரு மொழியினைப் பயன்படுத்தினால் வருகின்ற வல்லினத்தை மிகுத்து எழுதலாம்.

மா – என்பதற்கு வண்டு என்னும் ஒரு பொருளுமுண்டு. வண்டு வாழும் பழம் மா+பழம்=மாம்பழம் ஆனது என்று ஒரு கருத்தும் – பெரிய பழம் மா+பழம்=மாம்பழம் ஆனது என்ற ஒரு கருத்தும் உண்டு. மாம்பழம் பெரிய பழம் என்றால், பனம்பழம், பலாப்பழம் ஆகியவை மாம்பழத்தினைவிட பெரியனவாக உள்ளனவே அப்பொருள் பொருந்துவதாகத் தெரியவில்லை.

பெரும்பாலும் இலக்கியங்களில் மிகுப்பதற்குக் காரணம் – இந்தப் பொருள் வேறுபாடு தெரியாமல் ஓரெழுத்தொரு மொழி என்றால் மிகுத்துவிடுதல் வேண்டும் என்னும் பொது நிலையினைக் கருத்தில் அமைத்துக் கொண்டு மிகுத்துவிடுகின்றனர் – பெரும்பான்மையோர்.

சங்கக் கால இலக்கியமாக இருப்பினும் – பிற்கால இலக்கியமாக இருப்பினும் – பெரிய, பெருமை, மிகவும் என்னும் பண்புப் பொருளில் மா – என்னும் ஓரெழுத்தொரு மொழியினை அடுத்து வருகின்ற வல்லினத்தை மிகுத்தல் கூடாது என்று அறிந்து – தமிழ் மொழியினது விதிமுறையினை அறிந்து – மிகுக்காமல் எழுதியிருக்கின்ற சான்றோர்தம் மொழிச் சீர்மையினைக் காண்போமாக.

"மா துயர் எவ்வமொடு" – மணிமேகலை – சிறைசெய் காதை –45ஆவது அடியில்; அதே காதை 57ஆவது அடியில் "மா பெரும் பூதம்" – என்று தாம் இருக்கின்றன.

"மதுரை மா தெய்வம்", "பாண்டிய மா தேவி", "மா சாத்துவன்" – என்று சிலப்பதிகாரத்தில் மிகுக்காமல் எழுதியிருக்கிறார் இளங்கோ.

"மா பாடியம்" என்று ஓர் இலக்கண நூலே இருக்கின்றது.

"மா கடல் கடந்து சென்று" – என்று – பன்மொழிப் புலவர் கா. அப்பாதுரையார் – "1800 ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம்" – பக்கம் – 170

"இந்து மா கடல்" – என்று – ந.மு. வேங்கடசாமி நாட்டார், "கள்ளர் சரித்திரம்" – என்னும் நூல் – பக்கம் – 7

"மா பயன் காட்டி" என்றும்; "மா புகழ்" என்றும் புலவர் புலியூர்க்கேசிகன் – புறநானூற்று உரை நூலுக்குத் தாம் இயற்றியுள்ள செய்யுளில் எழுதியுள்ளார்.

இதுவரையில் – மிகுக்காமல் எழுதியுள்ளவற்றைக் கண்டோம். இனி மிகுத்து எழுதியுள்ள சரியான பொருளைத் தருகின்றவற்றைப் பார்ப்போமாக.

"மாப் பிடியொடு" – என்று குறுந்தொகை 319ஆவது பாடலில் மிகுக்கப்பெற்றுள்ளது. பொருள் – பெண் யானையொடு என்னும் விலங்கைக் குறிக்கின்ற பெயர்ச்சொற் பொருளில்.

"மட மாத் தோகை" – என்று – குறுந்தொகை 34ஆவது பாடலில் மிகுக்கப்பெற்றுள்ளது. பொருள் – மயில் என்னும் பெயர்ப் பொருளில்.

## ஒரு செய்தி

வடசென்னைப் பகுதியில் – மகாகவி பாரதி நகர் என்று ஒரு பகுதி. மகா – என்பது சமற்கிருதச் சொல் என்று அதனை –மா – என்று தூய –தமிழ் ஆக்கி– "மாக்கவி பாரதி நகர்" என்று – ஓரெழுத்தொரு மொழியில் மிகுத்தல் வேண்டும் என்னும் கருத்தில் மிகுத்துவிட்டனர். பெருமை மிக்க கவி என்பது – விலங்குக் கவி என்றும் மாவுக் கவி என்றும் பொருள் தந்துகொண்டிருக்கிறது.

## முடிவுரை

நம் தாய்மொழித் தமிழில் ஓரெழுத்தொரு மொழி 68 உள்ளன. உலக மொழி எதனிலும் இல்லாத சிறப்பு. ஆங்கிலத்தில்கூட A–ஒரு; I–நான் ஆகிய இரண்டே. எல்லா ஓரெழுத்தொரு மொழிக்கும் வருகின்ற வல்லினம் மிகும். மா– என்னும் ஓரெழுத்தொரு மொழி நிலைத்திணைப் (தாவரப்) பொருளில் வருகின்ற வல்லினத்துக்கு ஏற்ற மெல்லினம் மிகும். மா – என்பது விலங்கு, பறவை, மாவு என்னும் பொருளில் அமைந்தால் வருகின்ற வல்லினம் மிகும். மா – என்பது – பெரிய, பெருமை, மிகவும் என்னும் பண்புப் பொருளில் அமைந்தால் மிகா என்பதனையும் அறிந்துகொண்டோம். ஆகையால், நாம் பேசும் போதும், எழுதும்போதும் இந்த நெறிமுறையைச் சரியாகக் கடைப்பிடித்துச் செம்மொழியான செந்தமிழ் மொழியினைக் காப்போமாக.

# கள் – கள்!



முனைவர் ஆ. அரிமாப் பாமகன்
மேனாள் ஆங்கில விரிவுரையாளர்
புதுச்சேரி

"நல்ல பேரை வாங்க வேண்டும்
பிள்ளைகளே! –நம்
நாடு என்னும்
தோட்டத்திலே நாளை
மலரும் முல்லைகளே!
நல்ல பேரை
வாங்க வேண்டும்
பிள்ளைகளே!
(வாலி, நம்நாடு)

*****

கள்ளைக் கண்டுபிடித்த அறிவாளி யாரோ அவர் பேரறிஞராக அதிலும் குறிப்பாக மொழியியல் பேரறிஞராக இருந்திருக்க வேண்டும்!

தமிழுக்கு உயர்திணை, அஃறிணை வகுத்த பேரறிஞரைப் போலவே, ஐம்பால் இலக்கணம் தந்த பேரறிஞரைப் போலவே பன்மை ஈறாக – விகுதியாகக் 'கள்' என்னும் ஒற்றை உருபைக் கண்டறிந்து தந்தவரும் மாபெரும் பேரறிஞரே! மொழிக்கட்டமைப்புக்கு உதவிய முன்னைப் பொறிஞரே!

அவன், அவள் – அவர்!
அவர் பன்மையாயினும் அவன்கள் அவனுங்கள், அவள்கள், அவளுங்கள் என்பன இன்றும் பேச்சுவழக்கில் உள்ளன. அவர் பன்மையாயினும் அவர்கள் என்னும் இருமடிப் பன்மையே வழக்கில் பெரும்பான்மையாக உள்ளது.
[சிலர் அதுகள் என்றும் அவைகள் என்றும் கூடப் பேசுகின்றனர், எழுதுகின்றனர்.]

தமிழ் மொழியில் உயர்திணையிலும், அஃறிணையிலும் (உயிருள்ளவை ஆயினும் உயிரற்றவை ஆயினும்) பெயருடன் 'கள்' சேரப் பன்மையாகிவிடும். வினைமுற்றுகளும் அவ்வாறே!

ஆண் – ஆண்கள்
பெண் – பெண்கள்
ஆடு – ஆடுகள்
மாடு – மாடுகள்
மரம் – மரங்கள்
செடி – செடிகள்
ஆறு – ஆறுகள்
மலை – மலைகள்

'கள்' என்னும் ஒற்றைச் சொல்லைப் பன்மை உருபாக்கி, ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகப் பொருள் மாற்றமின்றிப் பயன்படுத்திவருகிறோம்.
எனக்கு வியப்பைத் தருகின்ற ஓர் இலக்கணச் சிறப்புக் கூறு இது!

"கள்ளொடு சிவணும் அவ் இயற்பெயரே
கொள் வழி உடைய பல அறி சொற்கே."
(தொல்காப்பியம், சொல்லதிகாரம், பெயரியல் 15).

மேலே குறிப்பிட்ட நூற்பாவில், தொல்காப்பியர், 'கள்' விகுதி சேர்த்துக் கொள்ளும் இடமும் உண்டு என்று கூறியிருப்பதை உணரலாம். அவர் காலத்தில் கள் விகுதி சேர்க்காமலும் அஃறிணைப் பன்மை உணர்த்தப்பட்டது என்பதைக் குறிப்பால் அவர் உணர்த்துகிறார்.

மேலும், 'கள்' விகுதியோடு வாரா அஃறிணை இயற்பெயர்கள், அவை கொண்டு முடியும் வினைகளை வைத்து ஒருமை, பன்மை தெரியப்படும் என்கிறார்.
"தெரிநிலை உடைய அஃறிணை இயற்பெயர்
ஒருமையும் பன்மையும் வினையொடு
வரினே!"
(தொல்காப்பியம், சொல்லதிகாரம், பெயரியல் 17).

**மக்கள்:**

"காதலர் உழைய ராகப் பெரிதுவந்து
சாறுகொள் ஊரிற் புகல்வேன் மன்ற
அத்த நண்ணிய அங்குடிச் சீறூர்
மக்கள் போகிய அணிலாடு முன்றிற்
புலம்பில் போலப் புல்லென்று
அலப்பென் தோழியவர் அகன்ற ஞான்றே."
(குறுந்தொகை 41).

"மடவரே நல் ஆயர் மக்கள் நெருநை"
(கலித் தொகை 102: 30).

**மாக்கள் = மக்கள்:**

"கிளர் கோயில் ஒரு சிறை தங்கித்
தவம் செய் மாக்கள் தம் உடம்பு இடாஅது
அதன் பயம் எய்திய அளவை மான"
(பொருநராற்றுப்படை: 90–92).

**பொருள்:** செல்வச் செருக்கும் செம்மாந்த அழகும் சேர்ந்து கிளர்ச்சி யூட்டிய அவனது அரண்மனையின் ஓர் அறையில் தங்கியிருந்தோம். தவம் செய்யும் பெருமக்கள் தம் உடலை விட்டு உயிர் விலகுவதற்கு முன்பே தவத்தின் பயனை எய்துவர்.

"காணிய சென்ற இரவல் மாக்கள்"
(புற நானூறு 313: 3).

**ஆண்டு – ஆண்டுகள்:**

"குன்று மணந்த மலைபிணித் தியாத்தமண்,
பொதுமை சுட்டிய மூவர் உலகமும்,
பொதுமை இன்றி ஆண்டிசி னோர்க்கும்,
மாண்ட வன்றே, ஆண்டுகள், துணையே
வைத்த தன்றே வெறுக்கை;
. . . . . . . . . .
புணைகை விட்டோர்க்கு அரிதே,
துணைஅழத்
தொக்குஉயிர் வெளவுங் காலை,
இக்கரை நின்று இவர்ந்து உக்கரை
கொளலே."
(புறநானூறு 357).

**உரை:** சேர சோழ பாண்டியர் என்னும் மூவர் உலகத்தையும் ஒருங்கு ஆண்ட பேரரசர்க்கும் வாழும் ஆண்டுகளும், துய்க்கும் செல்வமும் வரையறுக்கப்பட்டுள்ளன. வரையறுத்த அளவுக்கு மேல் யாரும் துய்க்க இயலாது. இது அவரவருக்குத் தரப்பட்டுள்ள புணை (தெப்பம்). (இதனை விதி, ஊழ், பால் என்றெல்லாம் கூறுவர்) இந்தத் தெப்பத்தைத் கைவிட்டுவிட்டுச் செல்ல யாராலும் முடியாது. ஒருவருக்குத் துணை என்பது கணவன்–மனைவி உறவுதான். கூற்றுவன் ஒருவர் உயிரை எடுக்கும்போது மற்றொருவர் அழுவதே அன்றி இவ்வுலகத்தை விட்டுவிட்டு அவ்வுலகத்துக்கு அவருடன் செல்ல இயலாது. இதுவே உலகியல் மாட்சி.

**சொல் – சொற்கள்:**

கண்ணொடு கண்இணை நோக்கொக்கின்
வாய்ச்சொற்கள்
என்ன பயனும் இல (குறள் 1100).

**பொழிப்பு:** கண்களோடு கண்கள் நோக்கால் ஒத்திருந்து அன்பு செய்யுமானால் வாய்ச்சொற்கள் என்ன பயனும் இல்லாமற் போகின்றன.

"மிகுகொடா முத்தஞ் சூட்டி
மீளிமை தீர்த்து மின்னு
நகுகொடா மணிகள் நல்ல
தெளித்துக்கொண் டெழுதி நன்பொன்
முகபடாம் வைப்ப வாட்செற்று
அழன்றுகண் கரிந்த முல்லைத்
தொகுகடாங் கோதை வெய்ய
துணைமணி முலைகள் தாமே."
(சீவகசிந்தாமணி 1486).

**பிற மொழிகளை ஒப்பு நோக்கலாம்.**

**இந்தி:**

| ஒருமை | பன்மை |
|---|---|
| आँख (aakh) (eye) | – आँखे (aankein) (eyes) |
| पुस्तक (pustak) (book) | – पुस्तकें (pustakein) (books) |
| नीति (niti) (policy) | – नीतियाँ (nithiyan) (policies) |
| लिपि (lipi) (Script) | – लिपियाँ (lipiyan) (scripts) |
| नारी (nari) (Woman) | – नारियाँ (nariyan) (women) |
| चाबी (chabi) (Key) | – चाबियाँ (chabiyan) (keys) |
| चिड़िया (chidiya) (Sparrow) | – चिड़ियाँ (chidiyan) (sparrows) |
| बुढ़िया (budiya) (Old lady) | – बुढ़ियाँ (budiyan) (old ladies) |
| लता (lata) (Crepper) | – लताएँ (latein) (creppers) |
| वधू (vadu) (Bride) | – वधुएँ (vaduein) (brides) |

### ஆங்கிலம்:

| ஒருமை | பன்மை |
| --- | --- |
| deer | deer |
| fish | fish |
| boy | boys |
| box | boxes |
| leaf | leaves |
| wife | wives |
| goose | geese |
| tooth | teeth |
| baby | babies |
| man | men |
| ox | oxen |
| datum | data |

### பிரஞ்சு:

un bras : an arm
des bras : some arms

un choix : a choice
des choix : some choices

un stylo : a pen
des stylos : some pens

un livre : a book
des livres : some books

un chateau : a castle
des chateaux : some castles

un neveu : nephew
des neveux : nephews

un animal : an animal
des animaux : some animals

un cheval : a horse
des chevaux : some horses

un journal : a newspaper
des journaux : some newspapers

un oeil : an eye
des yeux : some eyes

சில மொழிகளில் ஒருமை இருமை பன்மை என எண் பாகுபாடும் அதற்கான திரிபுகளும் உண்டு. சங்கதத்திலும் உண்டு.

தமிழின் எளிமை, இனிமைப் பண்புகளில் 'கள்' என்னும் பன்மை விகுதிக்குச் சிறப்பிடம் உண்டு! இந்தக் 'கள்' அறிவியல் கண்ணோட்டத்துக்கும் கணினிப் பயன்பாட்டுக்கும் உதவும் என்று கருதுகிறேன்.

பல் – பல -> poly, plural.
பன்மைத்துவம் -> pluralism.

plural (adj.)
late 14c., originally in grammar (distinguished from singular), "containing or consisting of more than one," from Old French plurel "more than one" (12c., Modern French pluriel) and directly from Latin pluralis "of or belonging to more than one," from plus (genitive pluris) "more" (see plus). The noun meaning "a plural number" is from late 14c.

*******

"செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினும் என்"

– திருக்குறள் 420



# வள்ளுவம் – உறழ்பொருள்: இல்லை x உண்டு

**முனைவர் ப. கொழுந்தசாமி,**
அரசினர் ஆய்வு நிறுவனம், புதுச்சேரி.

எண்ணவும் ஆராயவும் வல்ல மனிதனின் மனநிலைமையும் வாழ்க்கைத் தேவையும் மாறக்கூடியது; முரண்பாடுடையது. ஒரு நேரத்தில் தேவைப்படுவது, வேறொரு நேரத்தில் தேவைப்படாமல் இருக்கலாம். ஒரு பொருளால் கிடைக்கின்ற மகிழ்ச்சியும் களிப்பும் மற்றொன்றாலும் பெறப்படலாம். ஆனால் இவை இரண்டின் பண்பும் மாறுபடலாம். ஒருவருக்கு மகிழ்ச்சியாக அமைவது பிறருக்கு ஏற்புடையதாக இல்லாமல் போகலாம். இத்தகைய இருமை/ மாற்ற முரண் நிலையை அற இலக்கியங்கள் வெளிப்படுத்தி அறமுரைத்தல் இயல்பானது; தேவையானது. தொல்காப்பியம் சுட்டுகின்ற காஞ்சித் திணை, பத்துப்பாட்டின் மதுரைக்காஞ்சி, முரண் தொடை ஆகியன இவண் ஒப்பத்தக்கன.

மனமும் அறிவும் ஒன்றோடு மற்றொன்றை ஒப்பியும் உறழ்ந்தும் அறியத்தக்கன. அறிவாக்கத்திற்கும் ஒன்றின் சிறப்புகளைத் தெளிவதற்கும் இத்தகைய ஒப்பீடுகள் வாய்ப்பாகின்றன. மானுட மேன்மைக்கான கொள்கை வரைவான வள்ளுவம், புணர்ச்சி விதும்பல் அதிகாரத்தில்,

> உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும்
> கள்ளுக்குஇல் காமத்திற்கு உண்டு ( குறள் 1281)

என்னும் குறட்பாவில் இத்தகைய மாறுபாட்டை எடுத்துரைக்கின்றது. இக் குறட்பாவைத் தலைவன், தலைவி ஆகிய இருவரின் நாடகத் தனிமொழியாகவும் மனித அனுபவமாகவும் ஏற்கலாம்; இளையோர்க்கு விளக்கலாம்.

பிரிந்து சென்ற தலைவன் வந்ததும் / பிரிவுக் குறிப்பு உணர்த்தியதும், அவனோடு ஊடாமல் தலைமகள் புணர்ச்சிக்கு விழைகின்றாள். அப்போது வெளிப்படுத்தப்பட்ட கூற்றாக இது அமைகின்றது. இதில் கள்ளும் காமமும் உறழப்படுகின்றன. காதல் தலைவனை/ தலைவியைக் கண்டதும் ஏற்படுகின்ற மனநிறைவான மகிழ்ச்சியும் புணர்ச்சியால் கிடைக்கின்ற அகநிறைவும் காமத்தின் விளைவு. இவ்வாறான விளைவு கள்ளால் ஏற்பட்டாலும், அது ஏற்புடையதன்று; விலக்கத்தக்கது; உடல்நலனைக் கெடுக்கவல்லது; பின்விளைவும் பயனற்றது. கள்ளுண்ணலைக் கடிந்து, வெறுக்க அறமுரைத்த திருவள்ளுவர், இங்கும் அந்த அறத்தை நினைவூட்டி, நல்லதை மட்டும் நாடுக என்று வலியுறுத்துகின்றார். கள்ளையும் காமத்தையும் இல்லை × உண்டு என்று உறழ்ந்து ஒன்றின் சிறப்பைச் சுட்டி, அறமுரைக்கின்ற/ காம உளவியலை, மகிழ்வித்து மகிழ் என்று விளக்கும் வள்ளுவம் கற்று இன்புறத்தக்கது; இளையோர் ஒழுகி உயர வழிகாட்டுவது. இதற்கு உரைகளும் வாய்ப்பாகின்றன.

*******

# நமது சூழலும் தமிழாகட்டும்!



முனைவர் வே.அருட்பாமணி

உதவிப் பேராசிரியர்த, மிழ்த்துறை
இந்தோ – அமெரிக்கன் கல்லூரி, செய்யார்,
திருவண்ணாமலை மாவட்டம்

காலங்கள் கடந்தாலும், கண்டங்கள் கடற்கோள்களால் அழிந்தாலும் என்றும் அழியாச் செல்வமாய் நின்று நிலைபெற்றது தமிழ்மொழி. ஆண்டு இதுவென அறுதியிட முடியாத தொன்மரபைப் பெற்றது நம் மொழி. தமிழ் என்னும் சொல்லே இறவா நிலையை அளிக்கும் அமிழ்தம் போன்றது. தமிழ்மொழி "தொன்மை, முன்மை, எண்மை, ஒண்மை, இளமை, வளமை, தாய்மை, தூய்மை, செம்மை, மும்மை, இனிமை, தனிமை, நுண்மை, திருமை, இயன்மை, வியன்மை" என்னும் செவ்வியல் பண்புகளைக் கொண்டுள்ளது என்கிறார் மொழிஞாயிறு தேவநேயப்பாவாணர்.

வரலாற்றுக்கு எட்டாத முதுபழந் தொன்மொழியாகும் உயர்தனிச் செம்மொழியான தமிழ். இது உலகத்து இருளை அகற்றும் சுடராகும்.

"ஓங்க லிடைவந் துயர்ந்தோர் தொழவிளங்கி
ஏங்கொலி நீர்ஞாலத் திருளகற்றும் – ஆங்கவற்றுள்
மின்னேர் தனியாழி வெங்கதிரொன் றேனையது
தன்னே ரிலாத தமிழ்"

மலையில் தோன்றி உலகோர் இருள் அகற்றி, உயர்ந்தோர் தொழத் தோன்றியவை இரண்டாகும். ஒன்று, மின்னேர் தனியாழியான கதிரவன் என்னும் ஞாயிறு, மற்றொன்று தன்னிகரற்ற தமிழ்மொழி எனத் தண்டியலங்கார மேற்கோள் பாடலொன்று கூறுகிறது. "தமிழர்க்குள்ள பெருமை எல்லாம் அவர் தொன்றுதொட்டுத் தூயதாக வழங்கிவரும் தமிழ்மொழியினைச் சார்ந்திருக்கின்றது" என்கிறார் மறைமலையடிகள்.

"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே"

என்றார் திருமூலர். தன் பிறவியின் முழுமை என்பதே மொழியால் பெறத்தக்கது என்பதைத் தம் வாய்மொழியால் உணர்த்துகிறார்.

தமிழர்கள் தம் வாழ்வோடு இணைந்து தம் வாழ்வுக்காகப் படிப்படியாக உருவாக்கிய மொழி. செயற்கையாக அன்றி இயற்கையாக உருவாகிய இயல்பான மொழி. இயற்கையாக உருவாகியது என்பதால் ஒவ்வொரு சொல்லுக்கும் வேர்ச்சொல் தமிழில் உண்டு. நமது நாட்டிற்குச் "செந்தமிழ்நாடு" என்று பெயர் வைத்தவர் பாரதியார். நாட்டிற்கு அடைமொழியாக மொழியும், மொழிக்கு அடைமொழியாகச் செம்மையும் கூறியது பெரும் சிறப்பாகும்.

ஒட்டக்கூத்தர் வேளை தாண்டியும் உண்ணாது சிந்தனையில் இருந்தார். அது கண்ட அவரின் மனைவி "இந்தப் பாலையாவது குடியுங்கள்" என்றார். அதற்கு ஒட்டக்கூத்தர், "வேண்டாம்மா, இன்று அரசவையில் புகழேந்தி அரங்கேற்றிய நளவெண்பாவைக் கேட்டபின் இவ்வூனுடல் பசியை அறியுமா? நான் தமிழ்ச்சுவையைப் பருகியவன்" என்றாராம். நம் வாழ்வோடு இணைந்து இழைந்தது நம் தாய்மொழியாம் தமிழ்மொழி. அறம் வைத்துப் பாடிய கலம்பகம் கேட்டால் உயிர்ப்பிரியும் எனத் தெரிந்தும் தமிழைச் சுவைப்பதன் மூலம் சாவே வரினும் அதனை மகிழ்வொடு ஏற்பேன் என்று கூறிய நந்திவர்மனை நாடறியும். ஆதிகால மனிதனின் அருமை மொழியாகத் தோன்றி, காலங்கள் பல கடந்தும் இன்றும் முத்தமிழாய், செந்தமிழ், பைந்தமிழ், அருந்தமிழ், நறுந்தமிழ், தீந்தமிழ், ஒண்டமிழ், தண்டமிழ், வண்டமிழ், தெளிதமிழ், தென்றமிழ், நற்றமிழ், தெய்வத்தமிழ், மூவாத்தமிழ், கன்னித்தமிழ், கனித்தமிழ், கணித்தமிழ் என்று பலவாறு போற்றப்படுகிறது. மக்களின் அன்றாட நிகழ்வுகளை வெளிப்படுத்தும் காலக் கண்ணாடியாய் இலக்கியங்கள் திகழ்கின்றன. "யாதும் ஊரே யாவரும் கேளிர்" "தீதும் நன்றும் பிறர்தர வாரா" "பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்" "உண்டாலம்ம இவ்வுலகம்" "சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம்" போன்ற இலக்கிய அடிகள் இன்றும் வாழ்ந்து கொண்டிருக்கிற மக்களுக்கு வழிகாட்டும் கலங்கரை விளக்கமாய்த் திகழ்கின்றன. மொழி இலக்கை, குறிக்கோளை மக்களிடையே விதைத்துப் பண்பட்ட மனிதர்களாய் வாழ வகை செய்கிறது.

எதிர்பாராத விதமாய்த் தலைவன் தலைவியின் சந்திப்பு நிகழ்கிறது; காதல் மலர்கிறது. முன்பின் அறியாதவருடன் பழக்கம் என்பதால் தலைவிக்கு அச்சமும், ஐயமும் மேலிடுகிறது. எங்கு இவன் நம்மை ஏமாற்றிவிடுவானோ என மனம் மருள்கிறது. இதையறிந்த தலைவன் தமிழ்ச்சுவை பொதிந்த பாடல் மூலம் தலைவியின் மனக்கவலையை மாற்றுகிறான்; அன்பைக் காட்டுகிறான்.

"யாயும் ஞாயும் யாராகி யரோ
எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்
யானும் நீயும் எவ்வழி அறிதும்
செம்புலப் பெயல் நீர்போல
அன்புடை நெஞ்சம் தாம்கலந் தனவே"

என்று தலைவிக்குக் காதல் அச்சத்தைப் போக்கி தமிழ்ச்சுவையின் உச்சத்தைக் காட்டுகிறார். இத்தனை கவி வல்லமை தமிழ்மொழியைத் தவிர வேறெந்த மொழிக்கு உண்டு.

"யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல்
இனிதாவது எங்கும் காணோம்"

என்ற மகாகவியின் சொற்கள் எத்தனை மொழிகள் ஒருவர் கற்றாலும் அது அவரவர் தாய்மொழிக்கு ஈடாகாது என்பதை உணர்த்துகிறது. அந்த "இன்பத் தமிழ் உயிருக்கு நேர்" என்ற புரட்சிக்கவியை இங்கு நோக்குவோம்; அமிழ்தாம் தமிழை அகத்தில் நினைப்போம்; உயிரான தமிழை உள்ளத்தில் கொள்வோம். தமிழ்மொழி நம் உணர்வெனக் கொள்வோம். எத்தனையோ இலக்கியங்களை ஈன்றெடுத்த நம் உயர்தனிச் செம்மொழியாம் தமிழ்மொழியை நாளும் போற்றுவோம்.

# சங்க இலக்கியத்தில் கங்கை

முனைவர் பி. பாலசுப்பிரமணியன்

ஆய்வு ஒருங்கிணைப்பாளர் (ம) உதவிப் பேராசிரியர்
தமிழ் முதுகலை மற்றும் ஆய்வுத்துறை
மருதர் கேசரி ஜெயின் மகளிர் கல்லூரி
வாணியம்பாடி, திருப்பத்தூர் மாவட்டம்.



பண்டைத் தமிழ்ச் சமூகத்தின் வாழ்வியலை அறிந்து கொள்வதற்குச் சங்கப் பாடல்கள் உதவுகின்றன. சங்கப் பாடல்களில் பதிவு செய்யப்பட்டுள்ள சொற்களின் வாயிலாக வரலாற்றையும் அன்றைய காலத்து நிலவியல் சூழலையும் அறிந்துகொள்ள முடிகிறது. இன்று இந்தியா முழுமைக்கும் வெவ்வேறு மாநிலங்களில் கடலை நோக்கி விரையும் ஆறுகள், ஆறுகளை ஒட்டிய கோயில்கள் புனிதமான இடங்களாகக் கருதப்படுகின்றன. வட இந்திய மக்கள் இராமேசுவரத்தை நோக்கிப் பயணிப்பதையும் தென்னிந்திய மக்கள் காசியைத் தரிசிக்கப் பயணிப்பதையும் தொன்றுதொட்டுக் காண முடிகிறது. இவ்வாறான சூழலில் சங்க இலக்கியங்களில் கங்கை, வையை, காவிரி, பொருநை ஆறுகள் பற்றிய குறிப்புகள் காணக்கிடைக்கின்றன. இங்கு, கங்கை என்ற சொல் சங்க இலக்கியத்தில் எந்தெந்த நூல்களில், எத்தனை பாடல்களில், என்ன பொருண்மையில் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதை ஆராயும் நோக்கில் இக்கட்டுரை அமைகிறது.

## சங்க இலக்கியம் – கங்கை

சங்க இலக்கியமான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு நூல்களில் கங்கை என்ற சொல் இடம்பெறுகிறது.

"எட்டுத்தொகை நற்றிணையில் 189, 369 ஆம் பாடல்களிலும் அகநானூறு 265 ஆம் பாடலிலும் புறநானூறு 161 ஆம் பாடலிலும் பரிபாடல் 16 ஆம் பாடலில் 36 ஆவது அடியிலும் கங்கை என்ற சொல் இடம்பெறுகிறது. பத்துப்பாட்டுப் பெரும்பாணாற்றுப்படையில் 431 ஆவது அடியிலும் மதுரைக்காஞ்சியில் 696 ஆம் பாடலடியிலும் பட்டினப்பாலையில் 190 ஆம் அடியிலுமாகக் கங்கை என்ற சொல் பதிவுசெய்யப்பட்டுள்ளது" என்பர் பெ. மாதையன், தாமஸ்லெக்மன், தாமஸ்மால்டன்.

## நற்றிணை – கங்கை

சங்க இலக்கிய அகநூல்களுள் ஒன்று நற்றிணை. நானூறு பாடல்களைக் கொண்டது. இந்நூலின் 189 ஆவது பாடலில் 'கங்கை' சொல் குறிப்பிடப்பட்டுள்ளது.

தலைவனின் பிரிவால் உடல்மெலிந்து வருத்தத்துடன் இருக்கின்ற தலைவியிடம், தலைவன் விரைந்து உன்னைக் காண வருவான் என உறுதிபடக்கூறி தோழி ஆற்றுவிப்பதாக, இப்பாடல் அமைந்துள்ளது. இப்பாடலைப் பாடிய புலவர் பெயர் குறிப்பிடப்படவில்லை.

தலைவியிடம் "கொடிய கொலைத்தொழிலைச் செய்வதில் வல்லவனாக இருக்கின்ற வேட்டுவன் விரித்துவைத்த வலையை அறுத்துவிட்டோடும் சேவல் புறா, சிலந்திப் பூச்சி தன் வாயின் நூலாலே கட்டிய வலையைக் கண்டு அஞ்சும். அத்தகைய சுழன்று அடிக்கின்ற சூறைக்காற்றை உடையதுமான சுரவழியில் தலைவன் சென்றார். அவரில்லாமல் சிறிதும் என்னால் வாழமுடியாது. இது அவருக்குத் தெரியும் இருப்பினும் அவர் இன்னும் என்னைக் காண வரவில்லை. அவ்வாறு வரவில்லையென்றால் அவர் எங்கு சென்றிருப்பார்? வருத்துகின்ற சினமுடைய தெய்வத்தின் சினத்தை நீக்கப் பாணர் சிறிய யாழின் நரம்பை இசைப்பதைப் போல, இனிய குருகுப் பறவைகள் இருக்கின்ற கங்கையாற்றின்கண் ஓடுகின்ற மரக்கலத்தில் ஏறி எங்கேயாவது சென்றிருப்பார் எனக் கருதுகிறாயா? வேறு ஏதேனும் தொழில் மேற்கொண்டு அகன்றிருப்பார்? என நினைக்கின்றாயா? அவர் ஓரிடத்தும் போகமாட்டார், வேறு செயலும் செய்யமாட்டார். அவர் இப்பொழுதே வருவார் நீ வருந்தாதே" என்கிறாள் தோழி என்பதை,

"தம் அலது இல்லா நம் நயந்து அருளி
இன்னும் வாரார் ஆயினும் சென்னியர்
தெறல் அருங் கடவுள் முன்னர் சீறியாழ்

நரம்பு இசைத்தன்ன இன்குரற் குருகின்
கங்கை வங்கம் போகுவர் கொல்லோ
எவ்வினை செய்வர்கொல் தாமே வெவ்வினை"
(நற்.பா.எ. 189)

என்ற பாடல்வழி அறியலாம். இந்தப் பாடலில் இடம்பெற்றுள்ள கங்கை வங்கம் என்ற சொல் தலைவன் தொழில் நிமித்தமாக வடபகுதிக்குச் சென்றிருக்கலாம் என்பதை உணர்த்துகிறதா? குருகுகள் நிரம்பி இருக்கின்ற கங்கை ஆறு எனக் காட்சிப்படுத்துவதன் வழி பாடலை இயற்றியப் புலவருக்குக் கங்கையாறு குறித்துத் தெரிந்திருக்கிறதா? கங்கையாற்றை இங்கே குறியீடாகப் பயன்படுத்த வேண்டிய அவசியம் ஏன் வந்தது? ஒருவேளை கங்கை என்று குறிப்பிட்டதனால் தலைவியை மறந்து துறவற மனநிலைக்குச் சென்றிருப்பானா? இல்லை தலைவியை ஆற்றுப்படுத்துதலுக்காகத் தோழி கங்கையை ஓர் உவமைக்காகப் பயன்படுத்தியிருப்பாளா? எனப்பல கேள்வி எழுகிறது. அந்தக் காலத்திலேயே படைப்பாளிகளுக்குக் கங்கை பற்றிய அறிமுகம் இருந்திருக்கிறது என்பது தெளிவாகிறது.

நற்றிணை 369 ஆவது நெய்தல் திணை தலைவி கூற்றுப் பாடலிலும் கங்கைப் பேர்யாற்றுக் கரை என்பது இடம்பெற்றுள்ளது. இந்தப் பாடலைப் பாடியவர் மதுரை ஓலைக்கடையத்தூர் நல்வெள்ளையார் என்பவர் ஆவார். காதலை முறையாகத் தலைவி வெளிப்படுத்தியபிறகு,தலைவன் திருமணத்தை இடை வைத்துப் பொருள்வயிற் பிரிந்தான். இருப்பினும் அவனின் பிரிவை மனம் ஏற்க மறுக்கிறது. ஒவ்வொரு நாள் மாலைப்பொழுதும் பிரிவுத் துன்பத்தை அனுபவிக்கிறேன் எனத் தோழியிடம்,

ஞெமை மரங்கள் ஓங்கி உயர்ந்த இமயமலையின் உச்சியினிடத்து வானிலிருந்து மலை வீழ்ந்தால் உண்டாகும் வெள்ளிய அருவியை உடைய பெரிய கங்கையாற்றைக் கரை கடந்து நீர் இறங்கி, அணையை உடைக்கும் வெள்ளம் போன்று பெருகி வரும் என் நிறையை அழிக்கும் காமவெள்ளத்தை நான் எவ்வாறு நீந்துவேன் என்பதை அறிய மாட்டேன். நான் எவ்வாறு பிழைப்பேனோ? என்பதை,

"ஞெமை ஓங்கு உயர்வரை இமையத்து உச்சி
வாஅன் இழிதரும் வயங்கு வெள் அருவிக்
கங்கைஅம் பேர் யாற்றுக் கரை இறந்து இழிதரும்
சிறை அடு கடும்புனல் அன்ன என்
நிறை அடு காமம் நீந்துமாறே"
(நற்.பா.எ.369)

என்ற பாடல் வெளிப்படுத்துகிறது. இந்தப் பாடலில் தலைவியின் பிரிவுத்துயரத்திற்குப் (காமவெள்ளம்) பெரிய கங்கையாற்றங்கரையில் பெருகிவரும் வெள்ளம் உவமையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இப்பாடலில் கங்கையாற்றின் தோற்றம் இமயமலை என்பதைப் பதிவு செய்கிறார் இப்புலவர். மேற்கண்ட இரண்டு பாடல்களிலும் தலைவியின் பிரிவுத்துன்பத்திற்கு உவமையாகக் கங்கையாறு பயன்படுத்தப்பட்டுள்ளமையை அறிகிறோம்.

### அகநானூறு – கங்கை

அகநானூறு 265 ஆம் பாலைத்திணை தலைவி கூற்றுப் பாடலில் கங்கை என்ற சொல் இடம்பெற்றுள்ளது. தலைவன் தலைவியைப் பிரிந்து பொருளீட்டச் செல்கிறான். ஆனால், அவன் குறித்த நேரத்தில் வரவில்லை, காலம் நீட்டிக்கிறான். இதனால், மனம் வருந்திய தலைவி தோழியிடம்,

நம்மைவிட உறுதி தருவதாக எண்ணிச் சென்று தேட முனைந்துள்ள பொருளானது, அகற்சியுடைய விண்ணகப் பரப்பில் உயர்ந்து தோன்றி, புகைபோல் பொலிவுற்றுத் திகழ்ந்து, எரிகின்ற தீச்சுடர் போன்று, தோற்றம் தரும் பனிப்பொழுதும் இமயமாகிய மலையைவிட மிகப்பெரிதோ? அன்றிப் பல்வகைப் புகழும் போர்வெல்லும் ஆற்றலும் உடைய நந்தர் என்பவரது சிறப்புமிக்கப் பாடலிபுரத்திலே ஈட்டித் திரட்டிக் குவித்து வைத்திருந்து, பின்னர் கங்கையாற்றின் நீரடியில் மறைந்தொழிந்த நிதியம் போன்ற பெரும்பொருளோ? இவ்விரண்டும் இல்லையாயின் நம் தலைவர் நம்மைத் துறந்து சென்ற காரணம்தான் என்ன? என்பதை,

"புகையின் பொங்கி வியல்விசும்பு உகந்து
பனிஊர் அழற்கொடி கடுப்பத் தோன்றும்
இமயச் செவ்வரை மாறும் கொல்லோ?
பல்புகழ் நிறைந்த வேல்போர் நந்தர்
சீர்மிகு பாடலிக் குழீஇக் கங்கை
நீர்முதல் கரந்த நிதியம் கொல்லோ?
எவன்கொல் வாழி தோழி" (அக.பா.எ.265)

என்ற பாடல் வழி அறியலாம். இப்பாடலில் கங்கையை நந்தனின் வரலாற்றோடு இணைத்துப் பேசுகிறது. இந்தப்பாடலிலும் தலைவியின் பிரிவுத்துயருக்குக் கங்கையாறு பேசப்பட்டுள்ளது.

### புறநானூறு – கங்கை

புறநானூறு 161 ஆவது பாடலில் கங்கை என்ற சொல் இடம் பெற்றுள்ளது. குமணனின் வள்ளல்தன்மையைப் பெருஞ்சித்திரனார்

புகழ்ந்து பாடி யானை (பகடு) பரிசாகப் பெற்றத் தகவலை இப்பாடல் பதிவு செய்கிறது. இது பரிசில் துறையிலமைந்த பாடாண்திணைப் பாடலாகும்.

பெரிதாக ஒலிக்கின்ற பரப்பினையுடைய கடல்நீர் குறைபட நீரை முகந்து கொண்டு வேகமாகச் செல்லக்கூடிய மழைமேகங்கள் வேண்டிய இடத்தில் திரளாகக் குவிந்து ஒரு பெரிய மலைபோல் காட்சியளித்தன. சூல் முதிர்ந்து இடி, மின்னல் முதலாகிய தொகுதியுடன் இணைந்து மழை முறையாகப் பொழிந்தது. அவ்வாறு வளத்தை அளிக்கக்கூடிய மழை இல்லாத கோடை காலத்தில் அனைத்து உயிரினங்களும் நீருண்ணச் செல்லும் கங்கையில் கரை பொருந்தி வெள்ளம் நிறைந்திருக்கும். எல்லா உயிர்களும் நீர் உண்பதற்குக் காரணமாக இருக்கின்ற கங்கைப் பெருவெள்ளத்தைப் போல குமண வள்ளலே நீயும் எங்களுக்கும் பிறருக்கும் தலைமையாக இருந்து பாதுகாக்கிறாய் என்பதை,

நீண்டு ஒலி அழுவம் குறைபட முகந்து கொண்டு
ஈண்டு செலல் கொண்மூ வேண்டுவயின் குழீஇ
பெருமலை அன்ன தோன்றல் சூழ் முதிர்பு
உரும் உரறு கருவியொடு பெயல் கடன் இறுத்து
வள மழை மாறிய என்றூழ்க் காலை
மன்பதை எல்லாம் சென்றும் உண, கங்கைக்
கரை பொரு மலிநீர் நிறைந்து தோன்றியாங்கு
எமக்கும் பிறர்க்கும் செம்மலை ஆகலின்"
(புற.பா.எ.161)

என்ற புறநானூற்றுப்பாடல் உணர்த்துகிறது. இப்பாடலில் பெருஞ்சித்திரனார் மழை பெய்வதற்குரிய அறிவியலை மட்டும் சொல்வதல்லாமல் கங்கை நீர் எவ்வாறு பல்உயிர்களுக்கு உணவு ஆதாரமாக இருக்கிறது என்பதைக் குறிப்பிடுகிறது. பல்லுயிர்களுக்குப் பயன்படும் கங்கையாற்றைப் போல நீயும் பலருக்குப் பயன்படக்கூடிய மனிதராக இருக்கிறாய் என்று புகழ்ந்துரைக்கிறார் புலவர்.

அன்றைய காலத்திலிருந்து இந்தியாவில் ஓடும் நதிகளைப் பற்றிய புரிதலும் அறிமுகமும் பழந்தமிழர்களுக்கு இருந்திருக்கின்றன. குறிப்பாக, சூழலியப் பன்மைத்துவம் குறித்த பார்வை அவர்களுக்கு இருந்திருக்கிறது.

### பரிபாடல் – கங்கை

பரிபாடல் நூலிலுள்ள 16 ஆவது வைணவப் பாடலில் கங்கை என்ற சொல் இடம்பெற்றுள்ளது. நல்லழிசியார் பாடி நல்லச்சுதனார் இசையமைத்து நோதிறப் பண்ணில் உருவான பாடல் இது.

காதற்பரத்தையுடன் வையையில் நீராடிய தலைவன் தலைவியை ஏற்றுக்கொள்ளச் சொல்லித் தோழியிடம் வாயில் வேண்டுகிறான். அவள் வையையில் நீராடியவாறே வாயில் மறுத்துக் கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

மலையிலிருந்து இறங்கிவரக்கூடிய அருவி சமவெளி நிலத்தை அடைந்து இருகரைகளிலும் உள்ள மலர்கள் பூக்கக்கூடிய மரங்களைச் சார்ந்து பூக்களைக் கொணர்ந்து வருகிறது. மரங்களில் வீழ்ந்த மலர்களும் மகளிரும் மைந்தரும் சூடிப்போட்ட மலர்களும் ஆற்றின் உடல்முழுவதும் மலர்களால் மூடப்பட்டுக் கிடக்கிறது. விண்மீன்களாகிய முத்துகள் பூத்து விளங்கும் வானத்திலிருந்து பெரிய கங்கையாறு போன்று இந்த வையை ஒத்திருக்கிறது. வண்டுகள் ஒலிக்கும் வையை ஆற்றுக்கு இது இயல்பானதாகும் என்பதை,

"மலையின் இழி அருவி மல்கு இணர்ச் சார்ச் சார்க்
கரைமரம் சேர்ந்து கவினி மடவார்
நனைசேர் கதுப்பினுள் தண்போது மைந்தர்
மலர்மார்பின் சோர்ந்த மலர் இதழ் தாஅய்
மின்ஆரம் பூத்த வியன் கங்கை நந்திய
வானம் பெயர்ந்த மருங்கு ஒத்தல் எஞ்ஞான்றும்
தேன் இமிர் வையைக்கு இயல்பு"
(பரி.பா.அடி. 32 – 38)

என்ற பாடல் வெளிப்படுத்துகிறது. வையை ஆறு கங்கையாறு போன்ற தோற்றமுடையது என்கிறார் புலவர். வையையும் கங்கையையும் ஒப்புமைப்படுத்திருப்பது கவனத்திற்குரியதாகும். பரிபாடலில் செவ்வேள், திருமால் ஆகிய கடவுள்களைப் பற்றிப் பாடல்கள் பாடப்பட்டிருந்தாலும் அவற்றோடு கங்கையைப் புலவர்கள் இணைக்கவில்லை. வையை என்ற ஆற்றோடுதான் இணைத்துப் பேசுகிறார் என்பது கவனிக்கத்தக்கதாகும்.

### பத்துப்பாட்டு – கங்கை

பத்துப்பாட்டில் பெரும்பாணாற்றுப்படை, மதுரைக்காஞ்சி, பட்டினப்பாலை ஆகிய மூன்று நூல்களில் உள்ள பாடலடிகளில் கங்கை என்ற சொல் பதிவு செய்யப்பட்டுள்ளது.

### பெரும்பாணாற்றுப்படை – கங்கை

பத்துப்பாட்டு நூல் வரிசையில் நான்காவதாக இடம்பெறுவது பெரும்பாணாற்றுப்படை. தொண்டைமான் இளந்திரையனைச் சிறப்பித்துக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடிய பாடலடிகள் பெரும்பாணாற்றுப்படை நூலாக அமைந்துள்ளது.

அரசனது அரண்மனை முற்றச் சிறப்பைப் பற்றிப் பாடும் பகுதியில் கங்கை என்ற சொல் இடம்பெற்றுள்ளது.

தேவர்கள் உறைகின்ற உச்சியை உடையதும் வெண்மையான அலைகளையுடைய நீர் கிழித்தோடுதலால் விளங்குகின்ற ஒளியையுடையதும் நெடிய சிகரத்தினின்றும் பொன்னைக் கொழித்துக் கொண்டு குதிப்பதும் மக்கள் கடத்தற்கு அரிதாகவும் உள்ள கங்கையாற்றைக் கடந்து செல்ல விரும்பும் மக்கள், ஆற்றில் இயக்கப்படும் தோணி ஒன்றேயாதலால் அது வரும் காலம்பார்த்து அங்கேயே உறங்கிக் கிடந்ததைப் போல கெட்டுப்போகாத திறைப்பொருள்களுடன் நெருங்கித் திரண்டு உள்ளே நுழைய காலம் பெறாமையால் அதனை எதிர்பார்த்துக் காத்திருக்கின்ற மன்னர்கள் நிறைந்து செழித்த அரண்மனை முற்றம் இளந்திரையனுடையது என்பதை,

"இமையவர் உறையும் சிமையச் செவ்வரை
வெண்திரை கிழித்த விளங்குசுடர் நெடுங்கோட்டுப்
பொன்கொழித்து இழிதரும் போக்குஅருங் கங்கைப்
பெருநீர் போகும் இரியல் மாக்கள்
ஒருமரப் பாணியில் தூங்கி யாங்கு
தொய்யா வெறுக்கையோடு துவன்றுபு குழீஇ
செவ்வி பார்க்கும் செழுநகர் முற்றத்து"
(பெரும்.பா.அடி. 429 – 435)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இந்தப் பாடலடிகள் கங்கையைக் கடக்கக் கலத்திற்காக மக்கள் கூட்டமாகக் காத்திருப்பதைப்போல இளந்திரையனைக் காண அவனது அரண்மனை முற்றத்தில் திறை செலுத்தும் மன்னர்கள் திரளாகக் காத்துக்கிடக்கின்றனர் என்று உவமையாகக் குறிப்பிடுகின்றன. கங்கையாறு மன்னனின் பெருமையைக் கூற உவமைப்படுத்தப்படுகிறது. கங்கை குறித்த புரிதல் பார்வை தென் பகுதியில் வாழ்ந்திருக்கிற உருத்திரங்கண்ணனாருக்குத் தெரிந்திருக்கிறது என்பதாக அறிய முடிகிறது.

### மதுரைக்காஞ்சி – கங்கை

பத்துப்பாட்டுத் தொகுப்பு வரிசையில் ஆறாவதாக இடம்பெறுவது மதுரைக்காஞ்சி. 782 அடிகளைக் கொண்டு ஆசிரியப்பாவாலும் இடையிடையே வஞ்சிப்பாவும் கலந்து பாடப்பட்ட நூல். வஞ்சிப்பாவின் அடி எல்லைக்கு நச்சினார்க்கினியர் மதுரைக்காஞ்சியை மேற்கோளாகச் சுட்டுவார். தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டிய நெடுஞ்செழியனுக்கு வீடுபேற்றையும் நிலையாமைக் கருத்துகளையும் செவி அறிவுறுத்துவதற்காக மாங்குடி மருதனாரால் பாடப்பட்ட நூல் இது. இத்தகைய சிறப்புப் பொருந்திய மதுரைக்காஞ்சி நூலின் 696 ஆம் பாடலடியில் கங்கை என்ற சொல் இடம்பெற்றுள்ளது.

பாண்டிய மன்னர்கள் பகைவர் நாட்டை அழித்துப் பெற்ற செல்வவளத்தைப் பற்றிக் குறிப்பிடுகையில் கங்கைப் பேரியாற்றை மாங்குடி மருதனார் உவமைப்படுத்துகிறார்.

மழவரை விரட்டியடித்துப் பெற்ற யானைகள், குதிரை, வேட்டுவரிடமிருந்த பெற்ற பசுந்திரள், மதிற்கதவுகள், திறைப்பொருள்கள் ஆகிய அனைத்தும் மதுரை நகரினுள் புகும் காட்சி, கங்கைப் பேரியாறு பல முகமாகக் கடலில் கலப்பதைப் போன்றதாகும் என்பதை,

"நாள்தர வந்த விழுக்கலம் அனைத்தும்
கங்கை அம்பேர் யாறு கடற்படர்ந்தாஅங்கு
அளந்து கடை அறியா வளம்கெழு தாரமொடு"
(மது.காஞ்.பா.அடி.695 – 697)

என்ற பாடலடிகள் வழி அறியமுடிகிறது. பகைவரிடமிருந்து பெற்ற பல பொருட்களுக்குப் பெரிய கங்கை ஆறு கடலில் கலப்பதை உவமையாகக் குறிப்பிடுவதைக் காணமுடிகிறது. இங்கும் கங்கையாற்றின் பேரளவு மட்டும்தான் பதிவுசெய்யப்பட்டுள்ளது. இந்நூல் வீடுபேற்றையும் நிலையாமையையும் சுட்டியிருந்தாலும் ஓரிடத்தில் கங்கையைச் சமயப்புனித இடமாகக் குறிப்பிடவில்லை என்பது ஆராயத்தக்கதாகும்.

### பட்டினப்பாலை – கங்கை

கரிகாற்பெருவளத்தானைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடிய இந்நூல் 301 அடிகளைக் கொண்டது. காவிரிப்பூம்பட்டினத்தைச் சிறப்பித்துக்கூறிய பாலைத்திணைப் பாடலடிகள் என்று இதனைக் குறிப்பிடுவர். தலைவன் பயணம் தவிர்த்து தன் நெஞ்சுக்குக் கூறுவதாய் இந்நூல் அமைந்துள்ளது. இந்நூலின் 190 ஆவது பாடலடியில் கங்கை என்ற சொல் இடம்பெற்றுள்ளது.

காவிரிப்பூம்பட்டினத்தின் தெருக்களில் இந்தியாவின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் கீழ்த்திசைக் கடற்பகுதிகளான அரேபியா, ஈழநாடு, கடாரநாடு, சீன நாடுகளிலிருந்தும் நீர் வழியாகவும் நிலத்தின் வழியாகவும் பல்வேறுவிதமான உற்பத்திப் பொருட்கள் புகார் நகரத்தில் விற்பனை செய்வதற்காகக் கொண்டு வரப்பட்டன என்று குறிப்பிடுகிறபோது, கங்கையாற்றைச் சார்ந்த பகுதிகளில் உற்பத்தியாகும் பொருள்களும் காவிரிக் கரைப்பகுதிகளில் விளையும்பொருட்களும்

எடுத்து வரப்பட்டன என்பதை,

"செல்லா நல்லிசை அமரர் காப்பின்
நீரின் வந்த நிமிர் பரிப் புரவியும்
காலின் வந்த கருங்கறி மூடையும்
வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்
குடமலை பிறந்த ஆரமும் அகிலும்
தென்கடல் முத்தும் குணகடல் துகிரும்
கங்கை வாரியும் காவிரிப் பயனும்"
(பட்.பா.அடி.184 – 190)

என்ற பாடலடிகள் மூலம் அறிய முடிகிறது. இங்கு வாரி என்பதற்கு வருவாய் (யானை, மாணிக்கம், முத்து, பொன் முதலிய) என உரையாசிரியர்கள் விளக்கம் தருகின்றனர். கங்கையாற்றின் பகுதிகளில் என்ன பொருள்கள் உற்பத்தியாயின என்ற செய்திகள் இல்லை. பொதுவாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

## மதிப்பீடு

- நற்றிணை, அகநானூற்றுப் பாடல்களைப் பாடிய புலவர்கள் தலைவனின் பிரிவுத்துன்பத்திற்குக் கங்கையாற்றை உவமைப்படுத்தியுள்ளனர். கங்கையின் தோற்றம் இமயமலை என்ற செய்தியையும் அறிய முடிகிறது. புறநானூற்றுப் பாடல் மன்னனின் வள்ளல் பண்பு பயன்படுவதைப்போல கங்கையாறு பல உயிரினங்களுக்கு வாழ்வாதாரமாக இருக்கிறது எனக் குறிப்பிடுகிறது.

- பெரும்பாணாற்றுப்படை மன்னனது அரண்மனை முற்றப் பெருமையைக் கங்கையாற்றின் பரப்போடு பொருத்திப் பேசுகிறது.

- மதுரைக்காஞ்சி மன்னனின் வெற்றியால் கிடைத்தத் திறைப்பொருள்களைக் கங்கை கடலோடு கலத்தலுடன் ஒப்பிட்டுப் பேசுகிறது.

- பட்டினப்பாலை காவிரிப்பூம்பட்டினத்தின் தெருக்களுக்குக் கங்கையாற்றின் கரைகளில் விளைந்த பொருட்கள் விற்பனைக்குக் கொண்டுவரப்பட்டன என்கிறது.

- இந்தியாவின் தென்பகுதியில் வாழ்ந்த ஒரு சில படைப்பாளிகள் மட்டும் கங்கையாறு பற்றிய செய்திகளைத் தமது பாடல்களில் பதிவு செய்திருக்கின்றனர்.

- சங்க இலக்கியத்தில் குறைந்த பாடல்களில் மட்டுமே கங்கையாறு பற்றிய பதிவு இடம்பெற்றிருக்கிறது. ஒருவேளை இந்தப் புலவர்கள் கங்கையைப் பார்த்திருக்கலாம் அல்லது கங்கை பற்றிக் கேள்விப்பட்டிருக்கலாம்.

- கங்கையாறு புனிதம் என்ற பொருண்மையில் எந்தப் புலவரும் தமது கருத்துகளை வலிந்து பதிவு செய்யவில்லை, திணிக்கவில்லை. குறிப்பாக, சிவனின் தலையில் கங்கை என்ற பதிவில்லை.

- பிற்காலத்தில் புராணிக மரபில் கடவுள்களை மரம், குளம், தீர்த்தம், விலங்கு, பறவை, ஆறு என்று இணைக்கிறபோது இவைகள் புனிதமயமாக்கப்பட்டிருக்கலாம். அதற்கு முன்பு இவை இயல்பான உயிர்கள் அவ்வளவுதான்.

- இந்தியாவில் உள்ள ஆறுகள் எல்லாம் எப்போது மதத்தோடு இணைத்துப் பேசப்பட்டது என்பது குறித்து ஆராய வேண்டியத் தேவையிருக்கிறது.

## துணை நூல்கள்


1. மாதையன். பெ., 2007 சங்க இலக்கியச் சொல்லடைவு, முதற்பதிப்பு, பதிப்புத்துறை, தமிழ்ப்பல்கலைக்கழக வெளியீடு, தஞ்சாவூர் – 613010.

2. நாராயணசாமி. அ., (உ.ஆ.), 1967, நற்றிணை நானூறு, முதற்பதிப்பு, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி – 06.

3. பாலசுப்பிரமணியன். கு.வெ., (உ.ஆ.), 2004, நற்றிணை மூலமும் உரையும், முதற்பதிப்பு, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், 4பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை – 98.

4. வேங்கடசாமி நாட்டார். ந.மு., வேங்கடாசலம் பிள்ளை. ரா., 1961, அகநானூறு, முதற்பதிப்பு, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி – 06.

5. செயபால்.இரா., (உ.ஆ.), அகநானூறு மூலமும் உரையும், 2004, முதற்பதிப்பு, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், 4பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை – 98.

6. பாலசுப்பிரமணியன். கு.வெ., (உ.ஆ.), 2004, புறநானூறு (தொகுதி – 1), முதற்பதிப்பு, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், 4பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை – 98.

7. பாலசுப்பிரமணியன். கு.வெ., (உ.ஆ.), 2004, பரிபாடல் மூலமும் உரையும், முதற்பதிப்பு, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், 4பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை – 98.

8. மோகன். இரா., (உ.ஆ.), 2004, பத்துப்பாட்டு (முதற் பகுதி) மூலமும் உரையும், முதற்பதிப்பு, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், 4பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை – 98.

9. நாகராசன். வி., (உ.ஆ.), 2004, பத்துப்பாட்டு (இரண்டாம் பகுதி) மூலமும் உரையும், முதற்பதிப்பு, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், 4பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை – 98.

10. சிங்காரவேலு முதலியார். ஆ., 1981, அபிதான சிந்தாமணி, முதற்பதிப்பு, ஏசியன் எடுகேஷனல் சர்வீசஸ், சி – 2/15, எஸ்.டி.எ., புதுதில்லி – 110016.

11. கதிரைவேற் பிள்ளை. ந., 1981, தமிழ்மொழியகராதி, முதற்பதிப்பு, ஏசியன் எடுகேஷனல் சர்வீசஸ், சி – 2/15, எஸ். டி.எ., புதுதில்லி – 110016.

12. வாழ்வியற் களஞ்சியம் (தொகுதி – ஒன்று), 1986, முதற்பதிப்பு, பதிப்புத்துறை, தமிழ்ப்பல்கலைக்கழக வெளியீடு, தஞ்சாவூர் – 613010.

13. Thomas Lehmann And Thomas Malten, 1993, A WORD INDEX FOR CANKAM LITERATURE, 2nd Edition, Institute Of Asian Studies, Chemmancherry, Chennai – 19, Tamilnadu, India.

## மயங்கொலிச் சொற்கள்

**நாலி**

1. கந்தைத் துணி, 2. கிழங்கு, 3. முத்து, 4. தகரை

**நாழி**

1. ஓர் அளவு " உண்பது நாழி உடுப்பது நான்குமுழம்" (நல்வழி. 28), 2. அளக்கும் ஒருபடி, 3. நாழிகை, 4. நூல்நாழி, 5. உட்டுளைப் பொருள், 7. அம்பறாத்தூணி "நாழி நவைதீ ருலகெல்லாம்" (கம்பரா. சரபங்க. 29)

**நாளி**

1. கள், 2. நாய், 3. கால அளவு, 4. மூங்கில், 5. பனை முதலியவற்றிலுள்ள வெளிவயிரம், 6. கற்றாழை, 7. புளிச்சைக்கீரை

# தமிழ்க் கலைக்கழகத்தின் 145–ஆவது கூட்டம்




இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவரும் நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு, தமிழ்நாடு அரசு தமிழ் வளர்ச்சித் துறை செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்ககத்தின் 'தமிழ்க் கலைக்கழகம்' செயற்பட்டுவருகிறது.

மக்களின் பேச்சுவழக்கிலும், ஊடகங்களிலும் காணப்படும் பிறமொழிக் கலைச்சொற்கள் இவ்வியக்ககப் பதிப்பாசிரியர்கள், உதவிப் பதிப்பாசிரியர் மற்றும் தொகுப்பாளர்களால் தொகுக்கப்பட்டு, அவற்றிற்கிணையான தமிழ்க் கலைச்சொற்கள் வடிவமைக்கப்படுகின்றன. அச்சொற்கள் திங்கள் இருமுறை நடைபெறும் தமிழ்க் கலைக்கழகக் கூட்டங்களில் சீராக்கம் செய்யப்பட்டு சொற்குவை வலைத்தளத்தில் பதிவேற்றம் செய்யப்படுகின்றன. அந்தவகையில் இவ்வியக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 145–ஆவது கூட்டம் 27.11.2023 ஆம் நாள் அகரமுதலி இயக்ககத்தில், இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் தலைமையில் நடைபெற்றது. இந்தக் கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு.பாலசுப்பிரமணியன், முனைவர் இரா.கு. ஆல்துரை, திரு. நா.சு.சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர்ம. மேலும் எழுத்தாளர் திரு. அகநம்பி மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்துகொண்டனர்.

கூட்டத்தில் 276 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

**ஏற்பளிக்கப்பட்ட கலைச்சொற்களுள் சில:**

| | |
|---|---|
| Broadcast Crop | கைவிதைப்பு |
| Browser Options | உலாவித் தேர்வுகள் |
| Browser Pane | உலாவி அடுக்கம் |
| Conceptual Difference | கருத்தியல் வேறுபாடு |
| Cookie Store | இணைநிரல் சேமிப்பகம் |
| Crash Report | செயலிழப்பு அறிக்கை |
| Cryptoanarchy | எண்மிய வன்செயல் |
| Developer Edition | உருவாக்குநர் பதிப்பு |
| Developer Program | உருவாக்குநர் நிரல் |
| Digital Loopback | எண்ம மீள்சுழற்சி |

# தமிழ்க் கலைக்கழகத்தின் 146–ஆவது கூட்டம்




செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 146–ஆவது கூட்டம் 30.11.2023 ஆம் நாள் அகரமுதலி இயக்ககத்தில், இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் தலைமையில் நடைபெற்றது. இந்தக் கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் இரா.கு. ஆல்துரை, திரு. அ. மதிவாணன் ஆகியோர் பங்கேற்றனர். மேலும், நூல் மதிப்புரையாளர் கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு, எழுத்தாளர் அகநம்பி மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்துகொண்ட இக்கூட்டத்தில் 245 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

ஏற்பளிக்கப்பட்ட கலைச்சொற்களுள் சில:

| | |
|---|---|
| Biometric authentication | உயிரிக்குறி இசைவேற்பு |
| Bluetooth device | ஊடலைக்கருவி |
| Bumper yield | மீ விளைச்சல் |
| Deciding factor | தீர்மானிக்கும் காரணி |
| Digital revolution | எண்மியப்புரட்சி |
| Existentialist theory | இருத்தலியல் கோட்பாடு |
| Favourite companion | விருப்பத்துணை |
| Gateway protocol | நுழைவாயில் நெறிமுறை |
| Genetic modification | மரபணு மாற்றம் |
| Humanitarion pause | மாந்தநேயப்போரிடை நிறுத்தம் |
| Humidity sensor | ஈரப்பத உணரி |
| Instructional media | கற்பித்தல் ஊடகம் |
| Kitchen demands | சமையற்கூடத் தேவைகள் |
| Match style | பொருந்தும் நடை |
| Micro drone | நுண்மின் சுரும்பி |

# தாய்த்தமிழின் முன்னேற்றத்தை முதன்மை இலக்காகக் கொண்டு மாணவர்கள் செயலாற்ற வேண்டும்!

## சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சி வகுப்பில் அகரமுதலி இயக்குநர் வலியுறுத்தல்!





தமிழ்நாடு அரசு, தமிழ்வளர்ச்சித்துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில் 22.11.2023ஆம் நாள் சென்னை, குரோம்பேட்டையில் உள்ள ஸ்ரீமதி தேவ்குன்வர் நானாலால் பட் மகளிர் வைணவக் கல்லூரியில் "சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டக் கூட்டம் நடைபெற்றது. கல்லூரி மாணவர்களின் தமிழ்கலைச்சொல்லாக்கத் திறனை வளர்த்தல், தூயதமிழ்ப் பயன்பாட்டை ஊக்குவித்தல், சொற்குவை வலைத்தளப் பயனாளர் எண்ணிக்கையைப் பரவலாக்கல் உள்ளிட்ட இலக்குகளின் அடிப்படையில் தமிழ்நாடு அரசின் சீரிய நெறிப்படுத்தலின்கீழ், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில் "சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம்" செயற்படுத்தப்பட்டுவருகிறது.

அந்தவகையில் 22.11.2023ஆம் நாள் குரோம்பேட்டையில் உள்ள ஸ்ரீமதி தேவ்குன்வர் நானாலால் பட் மகளிர் வைணவக் கல்லூரியில் நடைபெற்ற கூட்டத்தில் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் சு. கௌசல்யாதேவி வரவேற்புரை வழங்க, கல்லூரியின் பொறுப்பு முதல்வர் முனைவர் இரா. இராதா தலைமையுரை வழங்கினார். கல்லூரியின் முதன்மைத் துணை முதல்வர் முனைவர் சி. விக்டோரியா பிரிஸில்லா, சுயநிதிப்பிரிவு துணை முதல்வர் முனைவர் ரேணு அகர்வால் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினார்கள்.

நிகழ்வில் திட்டச் செயலாக்க உரையாற்றிய அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள், "மாணவர்கள் அகராதி உருவாக்கத் திறனையும், கலைச்சொல்லாக்கத் திறனையும் வளர்த்துக்கொள்ள வேண்டும் என்று தெரிவித்தார். ஞாலமுதல்மொழியாகிய தாய்மொழியாக விளங்கும் தமிழ்மொழியை நாம் தாய்மொழியாகப் பெற்றதற்கு நாம் பெருமை கொள்ள வேண்டும் என்றும், பிறமொழிக் கலப்பில்லாமல் தமிழில் பேசுவதையும், தமிழிலேயே தலைப்பெழுத்துடன் கூடிய கையெழுத்திடுவதையும், நல்லதமிழ்ப் பெயர்களைச் சூட்டுவதையும் கடைப்பிடிக்க வேண்டும். தாய்த்தமிழின் முன்னேற்றத்தை முதன்மை இலக்காகக் கொண்டு செயலாற்ற வேண்டும் என்றும், அதற்கு அகரமுதலி இயக்ககம் நடத்தும் இத்தகைய கூட்டங்களை மாணவர்கள் நன்முறையில் பயன்படுத்திக்கொள்ள வேண்டும்" என்றும் தெரிவித்தார்.

கூட்டத்தில் அகரமுதலி இயக்ககத் தொகுப்பாளர் திரு. வே. பிரபு சொற்குவை குறித்து விளக்கவுரையாற்ற, கல்லூரித் தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர் முனைவர் ச. துர்கா நன்றிகூறினார். மாணவர்கள், பேராசிரியர்கள், தமிழார்வலர்கள் உள்பட பலர் கலந்துகொண்ட இவ்விரு நிகழ்விலும் பங்கேற்றுப் பயிற்சிபெற்ற மாணவர்களுக்கு அகரமுதலி இயக்ககம் சார்பில், "சொற்குவை மாணவத் தூதுவர்–2023" என்ற சான்றிதழ்கள் வழங்கப்பட்டன.

## மாலை – ஒருபொருட் பன்மொழி

| | |
|---|---|
| அணி | தார் |
| அணியல் | தெரியல் |
| அலங்கல் | தொங்கல் |
| ஆரம் | தொடலை |
| இலம்பகம் | தொடை |
| ஒலியல் | பிணயல் |
| கண்ணி | பூமாலை |
| கத்திகை | மலர்மாலை |
| கோதை | மாலை |
| சுருக்கை | |

# செய்தி நறுக்குகள்

THE NEW INDIAN EXPRESS
TAMIL NADU
02 CHENNAI TUESDAY 28.11.2023
newindianexpress.com

## 14L Tamil words & counting, Sorkuvai journey from Sangam era continues

T MURUGANANDHAM @Chennai

SORKUVAI Project, a comprehensive word corpus initiative of the Directorate of Tamil Etymological Dictionary Project of the State government launched in 2019, has uploaded 14 lakh words with their English meanings so far and is marching towards the target of uploading 15 lakh words within a few months.

The principal objective of the initiative is to collect all Tamil words from the Sangam period to the present day wherever and put them in an orderly manner.

Through *sorkuvai.com* website, people can find the meanings of Tamil words by keying in them in the search option available. The meanings are given in English, and etymological notes are given wherever possible, and in which text (book or work) it is used already. The other meanings of the word are also given.

Talking to *TNIE*, G Vijayaraghavan, Director of the Tamil Etymological Dictionary Project, said, "Our team collects the new technical terms and newly coined Tamil words used by the people in their day-to-day activities, and place them before the team of experts. Each and every newly coined word will be discussed thoroughly before accepting them as final for uploading in the Sorkuvai Word Corpus."

He said representatives and enthusiasts from foreign countries regularly take part in the meetings. So far, 144 such meetings have been held online. In these meetings, hundreds of scholars from abroad and other parts of the country took part and provided technical terms. Also, to encourage students to coin new words in Tamil, a special scheme is being implemented for college students.


G Vijayaraghavan

The new words are coined using five methods: revising and recoining the old words to suit the present purpose and extending the meaning of existing words, through translation and borrowing. In these processes, the origin of the word, whether they can convey the meaning to the common man easily, and whether they are easy to pronounce in day-to-day life etc are deliberated in detail by the experts committee before accepting. "Adding new words suitable for emerging situations, technical innovations, and social changes keeps any language lively. So, it is a constant process that needs to be done forever," said Vijayaraghavan.

Tamil words on numerous subjects from various dictionaries are being collated for Sorkuvai. The dictionaries include the Tamil Lexicon and English-Tamil Dictionary by the University of Madras, the Dravidian Etymological Dictionary, Word Concordance of Tamil Literature by the Tamil University, Dictionaries of Medical Terms and Computer Terms by Manavai Mustafa, Glossary of Administrative Terms, etc.

Some of the new Tamil words coined and added to Sorkuvai include: Selfie (Thaami/Thampadam); Metro Train (Maanagara Thodari); Smartphone (Thiran Pesi), CCTV (Maraikaani); Noodles (Izhaiyunavu), flip flop - purattal, sologamy - thanmanam ; flask (semacheppu); ancient document (thollavanam), headphone (sevi olippaan), Halwa (inkali), Ladoo (innurundai), share auto (pangu thani), silencer (oli adakki), e-currency (enma panam), sponge city (Neerthenga Nagaram), and Internet presence (Inaiya Iruppu).

For example, while coining a Tamil word for 'selfie', initially, 'suyami' was suggested. Since it has Sanskrit root, it was rejected by experts. Now, the words like 'thaami', and 'thanpadam', have been accepted as suitable Tamil words for 'selfie'. Similarly, 'karutharangu' is the already established Tamil word for seminar. Now the new facility available is the webinar. It has been translated as 'valaiyarangu'. The word train has been mentioned as iruppoordhi, thodar vandi, pugai vandi in the past. Now, it has been revised to the latest term 'thodari'.

Vijayaraghavan said among the Indian languages, a word corpus has been established for the first time for Tamil language.

The Etymological Dictionary Project Directorate was formed in 1974 headed by Tamil scholar Devaneya Pavanar and since then, it has published 31 huge volumes of etymological dictionaries.

In recent years, the concise edition of these 31 volumes and revised editions of the dictionaries in seven volumes have been published. Most of these dictionaries are available online on the Sorkuvai website for the use of the public.

இந்தியாவில் அதிக படங்களுடன் வெளிவரும் ஒரே மாலை நாளிதழ்
மாலை தமிழகம்
Maalai Tamizhagam — Evening Tamil Daily
www.maalaitamizhagam.com e-mail: maalaitamizhagam@gmail.com
சென்னை Chennai 23-11-2023 வியாழக்கிழமை (கார்த்திகை 7) வெளியூர் Out Station 24-11-2023 Volume - 14 Issue -244 பக்கம் Pages 6 விலை Price ₹.3



## தாய்த்தமிழின் முன்னேற்றத்தை முதன்மை இலக்காக கொண்டு மாணவர்கள் செயலாற்ற வேண்டும்: கோ.விசயராகவன் பேச்சு

**கல்பாக்கம், நவ.23 -**

தமிழ்நாடு அரசு, தமிழ்வளர்ச்சித்துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில் நேற்று (22ம் தேதி) சென்னை, குரோம்பேட்டை ஸ்ரீமதி தேவ்குன்வர் நானாலால் பட் மகளிர் வைணவக் கல்லூரியில், 'சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சி' திட்ட கூட்டம் நடைபெற்றது.



கல்லூரி மாணவர்களின் தமிழ் கலைச் சொல்லாக்கத் திறனை வளர்த்தல், தூயதமிழ்ப் பயன்பாட்டை ஊக்குவித்தல், சொற்குவை வலைத்தளப் பயனாளர் எண்ணிக்கையைப் பரவலாக்கல் உட்பட இலக்குகளின் அடிப்படையில் தமிழக அரசின் சீரிய நெறிப்படுத்தலின்கீழ், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம், 'சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சி' திட்டத்தை செயற்படுத்தி வருகிறது. அந்த வகையில், நடைபெற்ற இந்த கூட்டத்தில் கல்லூரி தமிழ்த்துறைத் தலைவர் கௌசல்யாதேவி வரவேற்புரை வழங்க, கல்லூரியின் பொறுப்பு முதல்வர் இரா.ராதா தலைமையுரையாற்றினார். கல்லூரியின் முதன்மைத் துணை முதல்வர் விக்டோரியா பிரிஸில்லா, சுயநிதிப்பிரிவு துணைமுதல்வர் ரேணு அகர்வால் வாழ்த்துரை வழங்கினர்.

இந்த நிகழ்ச்சியில் அகரமுதலி இயக்ககத்தின் இயக்குனர் கோ.விசயராகவன் திட்ட செயலாக்க உரை நிகழ்த்தினார். அவர் பேசிய அவர், ''மாணவர்கள் அகராதி உருவாக்கத் திறனையும், கலைச்சொல்லாக்கத் திறனையும் வளர்த்துக்கொள்ள வேண்டும். ஞால முதல் மொழியாகிய தாய்மொழியாக விளங்கும் தமிழ் மொழியைநாம் தாய்மொழியாகப் பெற்றதற்கு பெருமை கொள்ள வேண்டும். பிறமொழிக் கலப்பில்லாமல் தமிழில் பேசுவதையும், தமிழிலேயே தலைப்பெழுத்துடன் கூடிய கையெழுத்திடுவதையும், நல்ல தமிழ்ப்பெயர்களைச் சூட்டுவதையும் கடைப்பிடிக்க வேண்டும்.

தாய்த் தமிழின் முன்னேற்றத்தை முதன்மை இலக்காக கொண்டு செயலாற்ற வேண்டும், அகரமுதலி இயக்ககம் நடத்தும் இத்தகைய கூட்டங்களை மாணவர்கள் நன்முறையில் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்,'' என்றார். இயக்ககத் தொகுப்பாளர் வே.பிரபு, சொற்குவை குறித்து விளக்கவுரையாற்ற, கல்லூரித் தமிழ்த்துறை உதவி பேராசிரியர் துர்கா நன்றி கூறினார். மாணவர்கள், பேராசிரியர்கள், தமிழார்வலர்கள் உள்பட பலர் கலந்துகொண்ட இந்த இரு நிகழ்ச்சிகளிலும் பயிற்சிபெற்ற மாணவர்களுக்கு அகரமுதலி இயக்ககம் சார்பில், 'சொற்குவை மாணவத் தூதுவர்-2023' என்ற சான்றிதழ்கள் வழங்கப்பட்டன.

ஒரு புதிய அனுபவம்

# தினகரன்

Dinakaran

www.dinakaran.com /dinakarannews




ரிஸ்க் எடுத்து நடித்தார் பக்கம் 10



வங்க கடலில் புதிய காற்றழுத்தம் பக்கம் 5

இன்றைய இதழுடன் ராசி பலன்கள் புத்தகம் கேட்டு வாங்குங்கள்




● Chennai ● Thursday, 23-11-2023 ● Chennai ● Puduvai ● Vellore ● Salem ● Kovai ● Trichy ● Madurai ● Nellai ● Nagercoil ● Bengaluru ● Mumbai ● Delhi ● Volume 47 Issue 180 ● 16 Pages ₹6


■ சிறப்பு செய்தி




தமிழ்நாடு செந்தமிழ் சொற்பிறப்பியல் அகரமுதலி திட்டத்தின் கீழ் உருவாக்கப்பட்ட 'சொற்குவை' இணையத்தில் இதுவரை 14 லட்சம் தமிழ்ச் சொற்கள் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளது. உலகளவில் 3 லட்சம் பேர் சொற்குவை இணைய தளத்தில் இணைந்துள்ளனர்.

'தமிழ் அயரத் தாழ்ந்தான் தமிழன்- அவனே தமிழ் உயரத் தான் உயர்வான்' என்பார் மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணர். 'ஒரு இனம் காக்கப்பட வேண்டும் என்றால் முதலில் அந்த இனத்தின் மொழி காக்கப்பட வேண்டும்' என்பார்கள் மொழியியல் அறிஞர்கள். மொழியைக் காக்க வேண்டும் என்றால், சொற்களை காக்க வேண்டும். சொல் வளம் பெற்றால் தான் மொழியும் நலம் பெறும் என்பதும் அறிஞர்கள் கருத்து. அந்தவகையில் தமிழ் மொழியின் நலன் காக்க உருவாக்கப்பட்டதுதான் தமிழ்நாடு செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டம். அதன் பயனாக இன்று உலகளாவிய அளவில் தமிழ் மொழி இணையம் வழியாக எளிதில் சென்றுசேர்ந்துள்ளது. தற்போது அதன் வளர்ச்சி எந்த நிலையில் இருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ளுவதும் நமது கடமை.



இது குறித்து தமிழ்நாடு செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலித் திட்ட இயக்குநர் விசயராகவன் கூறியதாவது:

கடந்த 1974ம் ஆண்டு முன்னாள் முதல்வர் கலைஞரால் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலித் திட்டம் தொடக்கப்பட்டது. இந்நிலையில், தமிழ் மொழியைக் காக்க அதன் சொற்களையும் காக்க வேண்டும் என்பதுடன், தமிழ் மொழியின் வளத்தை பெருக்க, அதில் இருக்கின்ற அத்தனை சொற்களையும் பதிந்து பாதுகாப்பதோடு காலத்துக்கேற்ப புதிய கலைச் சொற்களையும் வடிவமைத்துப் புழக்கத்துக்கு கொண்டு வர வேண்டிய கட்டாயம் உள்ளது. அதை முன்னெடுத்து செல்லும் வகையில் செந்தமிழ் சொற்பிறப்பியல் அகர முதலித் திட்டத்தில் 'சொற்குவை' என்ற வலை தளம் கடந்த 2019ம் ஆண்டு உருவாக்கப்பட்டது.

நாள்தோறும் பல்வேறு புதிய புதிய துறைகள் உருவாகி வரும் இன்றைய அறிவியல் உலகில், அந்தந்த துறை சார்ந்த கலைச் சொற்களை எல்லாம் ஒன்றாக திரட்டி, அவற்றுக்கு இணையான தமிழக் கலைச் சொற்களை வடிவமைத்து இணைய தளத்தின் வழியனாக பொதுவெளியில் வெளியிடுவது, தமிழில் உள்ள அகராதிகளில் இடம் பெற்றுள்ள அனைத்துச் சொற்களையும் ஒன்று திரட்டி, அவற்றில் மீண்டும் வந்த சொற்களே வராமல் நிரல்படுத்தி தமிழின் சொல் வளத்தை உலகறியச் செய்வதும் அதன் வழியே தமிழின் சொல் வளத்தைப் பெருக்குவது. தமிழ்ச் சொல் வளத்தைப் பதிவேற்றிப் பாதுகாப்பதும் அகரமுதலி இயக்கச் சொற்குவையின் நோக்கம். சொற்குவைக்காக உருவாக்கப்பட்ட www.sorkuvai.com என்ற இணைய தளத்தில் கடந்த 2021ம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் வரை 3 லட்சத்து 91 ஆயிரத்து 682 சொற்கள் பதிவேற்றம் செய்யப்பட்டு இருந்தன. இவற்றுள் தமிழ்நாட்டின் 15 பல்கலைக் கழகங்களின் கலைச் சொல்லாக்கக் குழுவினரால் திரட்டப்பட்டு, தமிழ் இணையக் கல்விக் கழகத்தால் பதிப்பிக்கப்பட்ட தமிழ் இணையக் கல்விக் கழக கலைச் சொல் பேரகராதியின் 2 லட்சத்து 50 ஆயிரம் கலைச் சொற்கள், தமிழ் வளர்ச்சி இயக்ககத்தின் ஆட்சிச் சொல் அகராதியின் சொற்கள், இந்த இயக்ககத்தின் சொற்பிறப்பியல் பேரகரமுதலியின் சொற்கள், தமிழ்க் கலைக் கழகத்தால் வடிவமைக்கப்படும் கலைச் சொற்களும் இடம் பெற்றுள்ளன.

■ செந்தமிழ் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டத்தில் சொற்குவை வலை தளம் 2019ல் உருவாக்கப்பட்டது.

■ இதுவரை 14 லட்சத்து 2 ஆயிரத்து 350 சொற்கள் சொற்குவையில் சேர்க்கப்பட்டுள்ளது.

■ நடப்பாண்டின் இறுதிக்குள் இதை 15 லட்சமாக உயர்த்தும் வகையில் சொல் திரட்டுப் பணிகள் முடுக்கிவிடப்பட்டுள்ளன.

■ இந்த வலை தளத்தை 3 லட்சம் பேர் உலகளவில் பயன்படுத்தி வருகின்றனர்.

இந்நிலையில், தமிழ்நாடு முதல்வர் மு.க.ஸ்டாலின், 'அகராதியியலாளர்கள், தமிழ் அறிஞர்கள், ஆய்வாளர்கள், ஊடக நண்பர்கள், மாணவ மாணவியர் கலைச் சொல்லாக்கத்தில் ஈடுபட்டு சொற்குவை வலை தளத்தில் அனைத்து துறைகளின் கலைச் சொற்கள் இடம் பெற வகை செய்ய வேண்டும்' என்று அறிவுறுத்தியிருந்தார். அதன் பேரில் சொற்குவையில் சொற்களின் எண்ணிக்கையை உயர்த்துவதற்கான நடவடிக்கைகளை அகரமுதலி இயக்ககம் மேற்கொண்டது.

அதன்படி, தமிழ்க் கலைக் கழகம், வல்லுநர் குழுக்கூட்டம், சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம், துறைசார் புதிய கலைச் சொற்கள் கலந்தாய்வுக் கூட்டம், இணைய வழிப் பன்னாட்டுக் கலைச் சொல்லாக்கப் பயிலரங்கம், ஆகியவற்றின் வழியாகவும் கலைச் சொற்கள் பெறப்பட்டு, அவை சீராக்கம் செய்யப்பட்டு சொற்குவையில் சேர்க்கப்பட்டன. கல்லூரி அளவில் ஆவடி மகாலட்சுமி மகளிர் கலை அறிவியல் கல்லூரி, திருநின்றவூர் ஜெயா கலை அறிவியல் கல்லூரி, பொன்னேரி ஸ்ரீதேவி கலை அறிவியல் கல்லூரி, சென்னை டாக்டர் எம்ஜிஆர் ஜானகி கலை அறிவியல் கல்லூரி, சென்னை மாநிலக் கல்லூரி, சென்னை குருநானக் கல்லூரி, ஆவடி புனித பீட்டர் உயர் கல்வி மற்றும் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை குமாரராணி மீனா முத்தையா கலை அறிவியல் கல்லூரி, பட்டாபிராம் தருமமூர்த்தி ராவ் பகதூர் கலவல கண்ணன் செட்டி இந்துக் கல்லூரி, கிண்டி செல்லம்மாள் கல்லூரி, ஸ்ரீபெரும்புதூர் அரசு கலை அறிவியல் கல்லூரி, ஆகிய கல்லூரிகளை சேர்ந்த 166 மாணவ மாணவியருக்கு கலைச் சொல்லாக்கம் மற்றும் தூயதமிழ்ப் பயன்பாடு குறித்த அகப்பயிற்சி அளிக்கப்பட்டு அவர்கள் தொகுத்துக் கொடுத்த கலைச் சொற்களும் சொற்குவை வலை தளத்தில் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன.

அத்துடன், அகராதிகள், கலைச் சொல் நூல்கள் வைத்துள்ள தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள், அயல்நாடுவாழ் தமிழர்கள், ஊடகங்களில் இருந்தும், கணினி இணையம், திறன்பேசி, ஆகியவற்றின் உதவியுடன் பல்வேறு இணைய தளங்கள் மற்றும் சமூக ஊடகங்களில் இருந்தும் பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழக் கலைச் சொற்களைத் திரட்டியும், வடிவமைத்தும் சொற்குவைக்கு வழங்கி வருகின்றனர். அதன்பயனாக 3.9.2021ல் 4 லட்சத்து 30 ஆயிரத்து 186 சொற்கள் என்று தொடங்கி 22.11.2023ம் தேதி வரையில் 14 லட்சத்து 2,350 சொற்கள் சொற்குவையில் சேர்க்கப்பட்டுள்ளது. இந்த பணியில் 10 பேர் குழு ஈடுபட்டு வருகின்றனர். கடந்த 2 ஆண்டுகளில் மட்டும் 10 லட்சத்து 10 ஆயிரம் சொற்கள் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. நடப்பாண்டின் இறுதிக்குள் இந்த எண்ணிக்கையை 15 லட்சமாக உயர்த்தும் வகையில் சொல் திரட்டுப் பணிகள் முடுக்கிவிடப்பட்டுள்ளன. இந்நிலையில் தமிழ்நாடு அரசு உதவியுடன் சொற்குவை வலைதளத்தில் 3 லட்சம் பேர் உலகளவில் பயன்படுத்தி வருகின்றனர். இவ்வாறு இயக்குநர் விசயராகவன் தெரிவித்தார்.



# சொற்குவை சொல் எண்ணிக்கை 14 லட்சமாக உயர்வு அகரமுதலி இயக்குனர் கோ. விசயராகவன் பெருமிதம்!



கல்பாக்கம், நவ. 27-

தமிழ்நாட்டரசு தமிழ் வளர்ச்சித் துறை செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் இயக்குனர் கோ.விசயராகவன் வெளியிட்ட அறிக்கையில், "சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே அதைத் தொழுது படித்திடடி பாப்பா!" - மகாகவி பாரதியார் தமிழ்மொழி - தமிழ்நாடு - தமிழ்நலன் காக்க தன் வாழ்நாளெல்லாம் உழைத்த, மறைந்த முன்னாள் முதல்வர் கருணாநிதியால், 1974ம் ஆண்டு தொடங்கப்பெற்றது செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம். இந்த இயக்ககத்தின், 'சொற்குவை' வலைத் தளத்தில் இன்று வரை பதிவேற்றப்பட்ட சொற்களின் எண்ணிக்கை 14 இலக்கமாக உயர்ந்துள்ளது. சொற்குவை வலைத்தளப் பயனாளர்களின் எண்ணிக்கை இரண்டரை இலக்கத்தை தொட்டுள்ளது. சொற்குவையின் சொல் எண்ணிக்கை உயர்ந்தால் என்ன பயன் ஆகிவிடப்போகிறது? என்று சிலர் நினைக்கலாம்; கேட்கலாம். உயர்வது சொல் எண்ணிக்கை மட்டுமில்லை, தமிழ்த்தமிழின் பெருமையும் தான் என்பதைத் தமிழ் கூறும் நல்லுலகம் அத்தனைபேருக்கு உணர்த்தும்.

**'தமிழயரத் தாழ்ந்தான் தமிழன் - அவனே தமிழுயரத் தானுயர்வான் தான்'**

என்பார் மொழிஞாயிறு ... காக்க வேண்டுமென்றால் மொழியைக் காக்க வேண்டும்' என்பார்கள் மொழியியல் அறிஞர்கள். மொழியைக் காப்பதற்குச் சொற்களைக் காக்க வேண்டும். சொல்வளமே மொழி நலம். தமிழ்த்தமிழின் நலம் காத்து, வளம் பெருக்க அதில் ஏற்கனவே இருக்கும் அத்தனை சொற்களையும் பதிந்து பாதுகாப்பதோடு காலத்திற்கேற்ற புதிய கலைச்சொற்களையும் வடிவமைத்துப் புழக்கத்திற்கு கொண்டு வர வேண்டும்.

இவ்விரு முதன்மைப் பணிகளையும் மொழி முன்னேற்றத்திற்கான முதன்மைப் பணியாகக் கொண்டு செயலாற்றி வரும் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககச் செயலாற்றலுக்குச் சான்றுதான் 'சொற்குவை'யின் சொல் உயர்வு. நாள்தோறும் பல்வேறு புதிய புதிய துறைகள் உருவாகிவரும் இன்றைய அறிவியல் உலகில், அந்தத் துறை சார்ந்த கலைச்சொற்களையெல்லாம் ஒருங்குதிரட்டி, அவற்றிற்கு இணையான தமிழ்க் கலைச்சொற்களை வடிவமைத்து இணையதளத்தின் வழியாகப் பொதுவெளியில் வெளியிடுவதும், இதுவரை தமிழில் வெளிவந்துள்ள அகராதிகளில் இடம்பெற்றுள்ள அனைத்துச் சொற்களையும் ஒன்றுதிரட்டி; அவற்றுள், மீள்வருகையின்றி நிரல்படுத்தி, தமிழின் சொல்வளத்தை உலகறியச் செய்வதும், அதன்வழியே பெருக்குவதும், தமிழ்ச் சொல் வளத்தைப் பதிவேற்றிப் பாதுகாப்பதும் அகரமுதலி இயக்ககச் 'சொற்குவைத்' திட்டத்தின் முதன்மை நோக்கமாகும்.

கடந்த 2019ம் ஆண்டு சொற்குவையென்று தனியாக வலைத்தளம் (www.sorkuval.com) தொடங்கப்பெற்றது. இந்த வலைத்தளத்தில் 2021ம் ஆண்டு ஆக., 22ம் தேதி வரையில், 3,91,682 சொற்கள் பதிவேற்றம் செய்யப்பட்டிருந்தன. இவற்றுள் தமிழகத்தின் 15 பல்கலைக்கழகங்களின் கலைச்சொல்லாக்கக் குழுக்களால் திரட்டப்பட்டு, தமிழ் இணையக் கல்விக் கழகத்தால் பதிப்பிக்கப்பட்ட தமிழ் இணையக் கல்விக் கழகக் கலைச்சொல் பேரகராதியின் 2,50,000 கலைச்சொற்கள், தமிழ்வளர்ச்சி இயக்ககத்தின் ஆட்சிச்சொல் அகராதியின் சொற்கள், இவ்வியக்கச் சொற்பிறப்பியல் பேரகரமுதலிகளின் சொற்கள் மற்றும் தமிழ்க் கலைக்கழகத்தால் வடிவமைக்கப்படும் கலைச் சொற்களும் அடக்கம் என்பது குறிப்பிடத்தக்கது.

**'தமிழ்மொழியின் உயர்வு தனைக் காட்டுவது சொற்பெருக்கம்'**

என்ற புரட்சிக் கவிஞரின் விழைவிற்கிணங்கவும், அகராதியியலாளர்கள், தமிழறிஞர்கள், ஆய்வாளர்கள், ஊடகநண்பர்கள், மாணவச் செல்வங்கள் கலைச் சொல்லாக்கத்தில் ஈடுபட்டு 'சொற்குவை' வலைத்தளத்தில் அனைத்துத் துறைகளின் கலைச்சொற்கள் இடம்பெற வகை செய்ய வேண்டும்' என, முதல்வர் மு.க.ஸ்டாலின் அறிவுறுத்தலுக்கிணங்கவும், சொற்குவையின் சொல் எண்ணிக்கையை உயர்த்துவதற்கான நடவடிக்கைகள் அகரமுதலி இயக்ககத்தால் முழுமூச்சாக மேற்கொள்ளப்பட்டன.

அதன்படி, தமிழ்க் கலைக் கழகம், வல்லுநர்க்குழுக்கூட்டம், சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம், துறைசார் புதிய கலைச்சொற்கள் கலந்தாய்வுக் கூட்டம், இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம் ஆகியவற்றின் வழியாகவும் கலைச்சொற்கள் பெறப்பட்டு, சீராக்கம் செய்யப்பட்டு பதிவேற்றம் செய்யப்பட்டன.

சென்னை ஆவடி- மகாலட்சுமி மகளிர் கலை (ம) அறிவியல் கல்லூரி, திருநின்றவூர் ஜெயா கலை (ம) அறிவியல் கல்லூரி, பொன்னேரி - ஸ்ரீதேவி கலை மற்றும் அறிவியல் கல்லூரி,- டாக்டர் எம்.ஜி.ஆர். ஜானகி கலை மற்றும் அறிவியல் கல்லூரி, மாநிலக்கல்லூரி, குருநானக்கல்லூரி, ஆவடி- புனித பீட்டர் உயர்கல்வி (ம) ஆராய்ச்சி நிறுவனம், குமாரராணி மீனா முத்தையா கலை மற்றும் அறிவியல் கல்லூரி, பட்டாபிராம்- தருமமூர்த்தி இராவ்பகதூர் கலவல கண்ணன் செட்டி இந்துக் கல்லூரி, கிண்டி- செல்லம்மாள் மகளிர் கல்லூரி, திருப்பெரும்புதூர் அரசு கலை மற்றும் அறிவியல் கல்லூரி ஆகிய கல்லூரிகளைச் சேர்ந்த 166 மாணவ - மாணவியருக்கு கலைச்சொல்லாக்கம் மற்றும் தூயதமிழ் பயன்பாடு குறித்த அகப்பயிற்சி வழங்கப்பட்டு, அவர்கள் தொகுத்தளித்த கலைச்சொற்களும் சொற்குவை வலைத்தளத்தில் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன.

மேலும், அகராதிகள் (ம) கலைச்சொல் நூல்கள் வைத்திருக்கும் தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள், அயல்நாடுவாழ் தமிழன்பர்கள், பேராசிரியர்கள், அரசு சார் மற்றும் அரசு சாரா தமிழமைப்பினர் உள்ளிட்டோரின் உதவியோடு நடைபெற்ற அவர்கள் வழங்கிய சொற்கொடை வழியாகவும் சொற்குவையின் ... பட்டது. இவை தவிர, இயக்கப் பதிப்பாசிரியர்கள், உதவிப் பதிப்பாசிரியர், தொகுப்பாளர்கள் ஆகியோர் நாளிதழ்கள் மற்றும் ஊடகங்களிலிருந்தும், கணினி- இணையம் - திறன்பேசி ஆகியவற்றின் உதவியுடன் பல்வேறு இணையதளங்கள் மற்றும் சமூக ஊடகங்களிலிருந்தும் பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களைத் திரட்டியும், வடிவமைத்தும் சொற்குவைக்கு வழங்கி வருகின்றனர்.

மேலும், தன்னார்வ அடிப்படையில் மாநிலத்தின் பல்வேறு பகுதிகளிலும் உள்ள கல்வி நிலையங்கள் - நூலகங்களுக்குச் சென்று ஆய்வாளர்கள் அங்குள்ள அகராதிகளிலிருந்து சொற்களைத் திரட்டியும், சொற்குவைக்கு வழங்கிவருகின்றனர். அகரமுதலி இயக்ககத் திட்டப் பணியாளர்களோடு இயக்குநர் அவர்களும் நாளொன்றுக்குக் குறைந்தது 100 சொற்களையாவது சொற்குவையின் பதிவேற்றத்திற்கென அணியமாக்கும் பணியை முதன்மைப் பணியாகக் கொண்டு செயலாற்றி வருகின்றனர். அதன்பயனாக, 2021, ஆக., 22ம் தேதிவரை, 3,91,682 என்றிருந்த சொற்குவையின் சொல் எண்ணிக்கை தற்போது, 14 லட்சத்து 723 ஆகப் பெருகியுள்ளது.

அதன்படி, 3.9.2021ல் 4,30,186 என்ற எண்ணிக்கையில் இருந்த சொற்கள், டிச., 15ல் 6,79,051 ஆக உயர்ந்தது. தொடர்ந்து, 13.01. 874, ஏப்., 12ல் 9,94,990, ஏப்., 13ல் 10,10,008, ஆக., 9ல் 12,03,128, செப்., 13ல் 12,75,340, செப்., 25ல் 13,08,796, அக்., 19ல் 13,60,238, நவ., 6ல் 13,81,859, நவ., 15ல் 13,88,174, நவ., 20ல் 13,97,355, நவ., 21ல் 14,00,723, நவ., 22ல் 14,02,350 சொற்களாக உயர்ந்தன.

இயக்குனர் உட்பட மொத்தம் 10 பேர் திட்டப்பிரிவுப் பணிகளை மேற்கொண்டுவரும் நிலையில், (பதிப்பாசிரியர்கள் 3 பேர், உதவிப் பதிப்பாசிரியர் ஒருவர், தொகுப்பாளர்கள் 5 பேர்) 2023 ஏப்ரல் 13ம் தேதி சொற்குவையின் சொல் எண்ணிக்கை, 10 லட்சத்து 10 ஆயிரத்து 8 ஆக உயர்ந்து, 25.09. 2023 ஆம் நாள் 13 லட்சத்தைக் கடந்து 21.11.2023 ஆம் நாள் 14 லட்சத்து 723 ஆகப் பெருகியுள்ளது. கடந்த இரண்டு ஆண்டுகளில் மட்டும் 10 லட்சத்து 10 ஆயிரத்து 668 சொற்கள் சொற்குவையில் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

நடப்பாண்டின் இறுதிக்குள் இந்த எண்ணிக்கையை குறைந்தது 15 லட்சமாக உயர்த்தும் வகையில் சொல்திரட்டுப்பணிகள் முடுக்கிவிடப்பட்டுள்ளன. இந்த நிலையில் தமிழக அரசின் சீரிய ... அகரமுதலி இயக்ககத்தின் செயல்பாடுகளும் சற்றேறக்குறைய மூன்று லட்சத்தினர் சொற்குவை வலைத்தளத்தின் உலகளாவிய பயனாளராக உள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது'



# செய்தி நறுக்குகள்

தினமணி
சனிக்கிழமை 25 நவம்பர் 2023
சென்னை
14 பக்கங்கள் ரூ.9

## சொற்குவையில் 14 லட்சம் சொற்கள்; 3 லட்சம் பயனர்கள்: அகரமுதலி இயக்ககம்

**சென்னை, நவ. 24:** தமிழக அரசின் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் கீழ் உருவாக்கப்பட்ட 'சொற்குவை' தளத்தில் பதிவேற்றப்பட்ட கலைச் சொற்களின் எண்ணிக்கை 14 லட்சத்தைக் கடந்தது.

அதேவேளையில், அதனை பயன்படுத்துவோர் எண்ணிக்கையும் 3 லட்சத்தைத் தாண்டியுள்ளது.

நாள்தோறும் பல்வேறு புதிய துறைகள் உருவாகி வரும் இன்றைய உலகில், அந்தந்த துறை சார்ந்த கலைச் சொற்களை ஒன்றாகத் திரட்டி, அவற்றுக்கு இணையான தமிழ்க் கலைச் சொற்களை வடிவமைத்து, இணைய தளத்தின் வழியாக பொதுவெளியில் வெளியிடுவது, தமிழில் உள்ள அகராதிகளில் இடம் பெற்றுள்ள சொற்களையும் ஒன்று திரட்டி, அவற்றில் மீண்டும் வந்த சொற்களே வராமல் நிரல்படுத்தி, தமிழின் சொல் வளத்தை உலகறியச் செய்வதே அகரமுதலி இயக்ககச் சொற்குவை நோக்கமாகும்.

சொற்குவைக்காக உருவாக்கப்பட்ட www.sorkuvai.com என்ற இணையதளத்தில் கடந்த 2021-ஆம் ஆண்டு ஆகஸ்ட் வரை 3 லட்சத்து 91 ஆயிரத்து 682 சொற்கள் பதிவேற்றம் செய்யப்பட்டு இருந்தன. இதையடுத்து இந்த தளத்தை மேம்படுத்தி சொற்களை அதிகரிப்பதற்கான பல்வேறு நடவடிக்கைகளை தமிழக அரசு மேற்கொண்டது. அதன் பயனாக கடந்த 2 ஆண்டுகளில் மட்டும் 10 லட்சத்து 10 ஆயிரம் சொற்கள் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன.

கடந்த 3.9.2021-இல் 4 லட்சத்து 30 ஆயிரத்து 186 சொற்கள் தொடங்கி, 22.11.2023-வரையில் 14 லட்சத்து 2,350 சொற்கள் சொற்குவையில் சேர்க்கப்பட்டுள்ளன. இந்த பணியில் 10 பேர் குழுவினர் ஈடுபட்டுள்ளனர்.

நிகழாண்டின் இறுதிக்குள் இந்த எண்ணிக்கையை 15 லட்சமாக உயர்த்தும் வகையில் சொல் திரட்டுப் பணிகள் முடுக்கிவிடப்பட்டுள்ளன. இந்நிலையில் தமிழ்நாடு அரசு உதவியுடன் சொற்குவை வலைதளத்தில் 3 லட்சம் பேர் உலகளவில் பயன்படுத்தி வருகின்றனர் என அகரமுதலித் திட்ட இயக்குநர் விசயராகவன் வெளியிட்ட செய்திக் குறிப்பில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

## 'தமிழ்க் கலைக்கழகம்' 145வது கூட்டம்: 276 கலைச்சொற்கள் ஏற்பு

கல்பாக்கம், நவ. 20-

இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையானதமிழ்க்கலைச் சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டு வரும் நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு, தமிழ்நாடு அரசு தமிழ் வளர்ச்சித் துறை செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்ககத்தின், 'தமிழ்க் கலைக் கழகம்' செயல்பட்டு வருகிறது.



மக்களின் பேச்சுவழக்கிலும், ஊடகங்களிலும் காணப்படும் பிறமொழிக் கலைச்சொற்கள் இவ்விலக்கப் பதிப்பாசிரியர்கள், உதவிப்பதிப்பாசிரியர் மற்றும் தொகுப்பாளர்களால் தொகுக்கப்பட்டு, அவற்றிற்கிணையான தமிழ்க் கலைச்சொற்கள் வடிவமைக்கப்படுகின்றன. அந்த சொற்கள் திங்கள் இருமுறை நடைபெறும் தமிழ்க் கலைக் கழகக் கூட்டங்களில் சீராக்கம் செய்யப்பட்டு சொற்குவை வலைத் தளத்தில் பதிவேற்றம் செய்யப்படுகின்றன.

அந்த வகையில் தமிழ்க் கலைக்கழகத்தின் 145வது கூட்டம், கடந்த 20ம் தேதி இயக்குநர் கோ.விசயராகவன் தலைமையில் நடைபெற்றது. இந்தக் கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் சு.பாலசுப்பிரமணியன், முனைவர் இரா.கு. ஆல்துரை, நா.க.சிதம்பரம் மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்து கொண்டனர். கூட்டத்தில் 276 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

அதன்படி, Broadcast Crop - [illegible], Browser Options - உலாவித் தேர்வுகள், Browser Pane - உலாவி அடுக்கம், Conceptual Difference - கருத்தியல் வேறுபாடு, Cookie Store - இணையநிரல் சேமிப்பகம், Crash Report - செயலிழப்பு அறிக்கை, Cryptoanarchy - மறையியல் வன்செயல், Developer Edition - உருவாக்குநர் பதிப்பு, Developer Program - உருவாக்குநர் திரள், Digital Loopback - எண்ம மீள் சுழற்சி, Financial Outlay - நிதி ஒதுக்கீடு, Graphics Hard ware - வரைகலை வன்பொருள், Grassland Eco system - புல்வெளி சூழல் அமைப்பு, Icon View - சின்னத்தின் பார்வை, Lekker - சுவையான, Microprocessor System - நுண்செயலி முறைமை, Modulation Technique - பண்பேற்ற நுட்பம், Monopoly Power - தனிவல்லாண்மை, Multimedia Message - பல்லூடகச் செய்தி, Over whelming Victory - மாபெரும் வெற்றி, Para doxical Idea - முரண் கருத்து, Paradoxical Tendency - முரண்போக்கு, latform Configuration - தள அமைப்பு, Plutonic Age - ஆழ்பாறைக்காலம், Pro pagationMedium - பரப்பூடகம், Retrenchments - வேலையாள் குறைப்பு உள்ளிட்டவை அடங்கும்.

# அகரமுதலி இயக்ககம் நெறிப்படுத்தும் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம்!

"தேமதுர தமிழோசை உலகமெலாம்
பரவும் வகை செய்தல் வேண்டும்"
– உலக மாபாவலர் பாரதியார்

தமிழ்நாடு அரசின் சீரிய நெறிப்படுத்தலின்கீழ், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தால் 2021 அக்டோபர் 1ஆம் நாளிலிருந்து வெள்ளிதோறும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம் நடத்தப்பெறுகிறது. இப்பயிலரங்கத்தின் 110–111 அமர்வுகள் 2023 நவம்பர் 24, திசம்பர் 01 ஆகிய நாள்களில் நடைபெற்றன.

இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவருவது தமிழ்மொழியின் சொல்வள மேம்பாட்டிற்குரிய முகாமையான பணியாகும்.

புறநிலையில் உள்ள சொல்லாக்க வல்லுநர்களிடமிருந்தும் பல்வேறு துறைசார்ந்த கலைச்சொற்களைப் பெற்று, ஆய்ந்து சொற்குவையில் சேர்த்து, தமிழின் கலைச்சொல் வளத்தை உயர்த்தும் நோக்கில் நடத்தப்பெறும் இப்பயிலரங்க அமர்வுகளில் அயல்நாட்டு அறிஞர்கள், உள்நாட்டு அறிஞர்கள் பங்கேற்று பல்வேறு துறைசார்ந்த தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றினர்.

சொல்லாய்வாளர்கள், சொல்லாக்க அறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், பேராசிரியர்கள் உள்ளிட்ட பலர் பங்கேற்றும் பார்த்தும் பயன்பெற்றனர். கலைச்சொற்களை அறிமுகம் செய்த சொலாக்க அறிஞர்களுக்கும், பங்கேற்பாளர்களுக்கும் இயக்ககத்தின் சார்பில் பாராட்டுச் சான்றிதழ்களும் பங்கேற்புச் சான்றிதழ்களும் வழங்கப்பட்டன.

அமர்வுகளில் பங்கேற்கும் அறிஞர்களின் ஒருங்கிணைப்பினைப் பாரிசு பன்னாட்டு உயர்கல்வி தமிழாய்வு நிறுவன இயக்குநர் முனைவர் பேரா. ச. சச்சிதானந்தம் அவர்களும், தொழில்நுட்ப ஒருங்கிணைப்பினைச் சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர்

இரா. பன்னிருகைவடிவேலன் மற்றும் இயக்கக உதவிப் பதிப்பாசிரியர் திரு. ஏ. காந்தி ஆகியோரும் மேற்கொண்டனர்.

## 24.11.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்



**பேரா. மரு. போல் யோசெ.ஃப்**
மேனாள் பேராசிரியர்
கனடா



**கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு**
உரையாசிரியர்,
நூல் மதிப்புரையாளர்
சென்னை



**முனைவர் மெய். சித்ரா**
தலைவர், தமிழ்ப் பண்பாட்டு இயக்கம்,
ஆங்காங்



**திருமதி வெ. காயத்ரி**
மொழிபெயர்ப்பாளர்,
கோயம்புத்தூர்

## 01.12.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்



**முனைவர்**
**பரமேஸ்வரன் கமலரூபன்**
ஆராய்ச்சியாளர்,
இங்கிலாந்து



**திருமதி கிருஷ்ணலதா வசீகரன்**
கலை பண்பாட்டுச் சமூகச்
செயற்பாட்டாளர்
கலை பண்பாட்டுச் சமூக
அலுவலகம்
ஜெனீவா, சுவிட்சர்லாந்து



**கவிப்பாவை**
**சாவித்திரி கிருஷ்ணமூர்த்தி**
பொதுச்செயலாளர்,
கம்பன் கழகம், பிரான்சு



**திரு. இரா. நரசிம்மன் (எ)**
**சைபர்சிம்மன்**
தொழில்நுட்ப வலைப்பதிவாளர்
சென்னை

# அறிஞர்கள் வழங்கிய கலைச்சொற்களுள் சில...

**பேரா. மரு. போல் யோசெ.ஃப்**

| | |
|---|---|
| Perianal abscess | _ குதசூழ் சீழ்க்கட்டி |
| Colon polyps | _ பெருங்குடல் மென்சவ்வுக்கட்டி |
| Gastro Esophageal Reflux Disease | _ இரைப்பை உணவுக்குழலூடு பின்னியக்கம் |

**முனைவர் மெய். சித்ரா**

| | |
|---|---|
| Trigram | _ முச்சொற்கள் |
| Text Clustering | _ உரைத் திரளாக்கம் |
| Preprocessing | _ முற்செயலாக்கம் |

**கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு**

| | |
|---|---|
| Budge | _ கருத்து மாற்றுவி |
| Bungee | _ நெகிழ் கயிறு |
| Febrifuge | _ கடுங்காய்ச்சல் மருந்து |

**திருமதி வெ. காயத்ரி**

| | |
|---|---|
| Weather Sealed | _ வானிலைப் பாதுகாப்பு |
| Pixel Peeping | _ படப்புள்ளி நோக்குதல் |
| Lens Flare | _ வில்லைச் சிதறொளி |

**முனைவர் பரமேஸ்வரன் கமலரூபன்**

| | |
|---|---|
| Artificial General Intelligence | _ செயற்கை பரந்த நுண்ணறிவு |
| Reinforcement Learning | _ பட்டறிவுவழிக் கற்றல் |
| Natural Language Processing | _ இயல் மொழித் தரவுப் பகுப்பாய்வு |

**கவிப்பாவை சாவித்திரி கிருஷ்ணமூர்த்தி**

| | |
|---|---|
| Social Harmony | _ குமுகாய ஒத்திசைவு |
| Gossip | _ அலர்தூற்றல் |
| Realism | _ வாய்மையியல்/ உண்மையியல் |

**திருமதி கிருஷ்ணலதா வசீகரன்**

| | |
|---|---|
| Steak | _ சுட்ட இறைச்சி |
| Curling | _ சுழல் பனிக்கல்லு |
| Sauerkraut | _ மாமிசவத்தல் பொதி |

**திரு. இரா. நரசிம்மன் (எ) சைபர்சிம்மன்**

| | |
|---|---|
| Botnet | _ தீம்பொருள்வலை |
| Videotize | _ காணொலியாக்கம் |
| digital twin | _ எண்மப்படி |